# "இது என் தீர்மானம்..

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப் பெறலாம்."

என்கிறார்

பி. சுலோசனா



பி. சுலோசனா கூறுவதாவது: "என் வதனத்திற்கு அற்புத மாறுதலை அளித்திருக்கிறது லக்ஸ் டாய்லட் சோப்பின் மிருதுவான நுரை. வழக்கமாக உபயோகிப்பதால் இந்த சுத்தமான, வெண்மையான சோப் என் சருமத்தை பட்டுப்போல் வழவழுப்பாக இருக்கச் செய்கிறது."




# லக்ஸ் டாய்லட சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 370-X30 TM

கல்கி

# பொருளடக்கம்

மலர் 13 இதழ் 1 | 1953 ஆகஸ்டு 2 | விஜய ௵ ஆடி 18உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

ஜூலை
31௨
முதல்







ஜூபிடர்
# இன்ஸ்பெக்டர்



டைரக்ஷன் R. S. மணி .... ஸ்டுடியோ நெப்ட்யூன்



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 1

# திருப்பித் தாக்குங்கள்!

இன்றைய தினம் ராஜாஜி முதன் மந்திரியாக இருக்கலாம்; நாளைக்கு இன்னொருவர் முதன் மந்திரி பதவிக்கு வரலாம்.

இந்தத் தடவை காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி நடத்தலாம்; அடுத்த தடவை இன்னொரு கட்சியார் ஆட்சிப் பொறுப்பை வகிக்கலாம்.

தற்போதைய மந்திரி சபையினர் புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் ஒன்றை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்; அடுத்தாற்போல் வரும் மந்திரி சபை இந்தத் திட்டத்தை மாற்றி இன்னொரு திட்டத்தைக் கொண்டு வரக்கூடும்.

எது எப்படியானாலும், என்ன மாறுதல் அவ்வப்போது ஏற்பட்டாலும், மக்கள் பீதியின்றி வாழ்க்கை நடத்துவது முக்கியமானது.

காலிகளும், கயவர்களும், கொள்ளைக்காரர்களும், கொலை பாதகர்களும் எச்சமயம் திடீர் வெறிகொண்டு தாக்குவார்களோ என்ற பயமும், உயிருக்கும் உடைமைக்கும் எப்போது அபாயம் நேரிடுமோ என்ற பயமும் இன்றி எந்த நாட்டில் பிரஜைகள் வாழுகிறார்களோ, அந்த நாடுதான் நாடு; மற்றதெல்லாம் சுடுகாடுதான்.

சென்ற மகா யுத்தம் நடந்த காலத்தில் அக்கிராசனர் ரூஸ்வெல்ட், மார்ஷல் ஸ்டாலின், பிரதம மந்திரி சர்ச்சில் ஆகிய மூன்று மாபெரும் உலகத் தலைவர்கள் சேர்ந்து உலகப் பிரஜைகளுக்கு நாலு விதமான விடுதலை வேண்டும் என்று அறிக்கை வெளியிட்டார்கள். அந்த நாலு விடுதலைகளில் அவர்கள் முதன்மையாக வைத்த விடுதலை, 'பயத்தினின்று விடுதலை' யாகும்.

உலகத்தில் எப்போது எக்காரணத்தினால் யுத்தம் மூண்டு மக்களுக்குச் சர்வ நாசத்தை உண்டாக்குமோ என்ற பீதியினின்று உலக மக்கள் விடுதலை அடைய வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள்.

அம்மாதிரியே ஒரு தேசத்திற்குள் எப்போது மூர்க்கர்களும் கயவர்களும் பலாத்காரக் கலகத்தீயை மூட்டி யோக்கியமான பிரஜைகளுக்குத் தீங்கு விளைவிப்பார்களோ என்ற பயத்தினின்று விடுதலை அடைவதும் ஜன சமூகத்துக்கு மிக முக்கியமானது.

இந்தப் பீதியிலிருந்து விடுதலை ஏற்படாத வரையில், அரசியல் விடுதலையினால் யாதொரு பயனும் இல்லை என்றே சொல்லலாம்.

சமீபத்தில் தமிழ் நாட்டின் தென் கோடியில், தூத்துக்குடி நகரில் நடந்த சில சம்பவங்கள், ஒரு நாட்டின் நல்வாழ்வுக்குப் 'பயத்தினின்று விடுதலை' எவ்வளவு முக்கியமானது என்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

* * * *

தூத்துக்குடி நகரத்தின் ஒரு பகுதிக்குள் திடீரென்று கயவர்கள் பலர் கூட்டமாகப் புகுந்தார்கள். அடிதடி பலாத்காரத் திருவிளையாடல்களை நடத்தினார்கள். குற்றமற்ற குடிமக்களை ஹிம்சித்தார்கள். பெண்மணிகளையும் சின்னஞ் சிறு குழந்தைகளையும் துன்புறுத்தினார்கள். ஆடை ஆபரணங்களைப் பறித்தார்கள்; சொத்துக்களைச் சூறையாடினார்கள்; சூறையாட முடியாததைச் சேதப்படுத்தினார்கள். ஒரு பச்சிளங் குழந்தையைக் கொலை செய்ய முயன்று குற்றுயிராக விட்டுச் சென்றார்கள்.

இந்த விவரங்களைப் பத்திரிகைகளில் படித்தவர்களெல்லாரும், "நாம் இருபதாம் நூற்றாண்டில் சுதந்திரக் குடியரசின் கீழ் வாழ்கிறோமா, அரக்கர்கள் — ராட்சதர்களை யொத்த காட்டு மிராண்டிகளுக்கு மத்தியில் வாழ்கிறோமா?" என்று ஆச்சரியமும் அருவருப்பும் அடைந்தார்கள். ஆச்சரிய அருவருப்பு உணர்ச்சிகள் நீங்கிய பிறகு எஞ்சி நின்றது "இந்தமாதிரி அகோர கிருத்யங்களுக்கு இனி இடங் கொடோம்" என்ற துணிச்சலா, "ஐயோ! என்ன செய்வோம்?" என்ற பீதியா என்பது கேள்வி.

இந்தக் கேள்விக்கு மக்கள் சொல்லும் பதிலைப் பொறுத்தே, இந்த நாட்டின் வருங்கால மகோந்நதமோ அல்லது அதலபாதாள வீழ்ச்சியோ ஏற்படும் என்பது திண்ணம்.

# வழி பிறந்தது!




கராச்சியில் பாகிஸ்தான் பிரதமரும் இந்தியப் பிரதமரும் சந்தித்து இரு நாடுகளுக்கும் இடையேயுள்ள பிரச்னைகளைச் சுமுகமாகத் தீர்ப்பது பற்றிப் பேசினார்கள்.

---

தூத்துக்குடிக்கருகில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் சம்பந்தமாக நடைபெற்ற விசாரணையில், அவ்வூர் தி. மு. கழகத்தின் தலைவர் என்று சொல்லிக் கொண்டவர், மேற்படி இழி செயல்களுக்குத் தி. மு. கழகம் பொறுப்பில்லை என்று தெரிவித்துக் கொண்டார். தி. மு. கழகத்தின் திட்டம் அதுவல்லவென்றும், அம்மாதிரி வீதிகளில் புகுந்து வீட்டிலுள்ளவர்களைத் தாக்கும்படி சொல்லப்படவில்லையென்றும் கூறினார். ஊரிலுள்ள காலிகள்—கயவர்கள் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அத்தகைய இழி செயல்களைப் புரிந்திருக்க வேண்டும் என்றும் தெரிவித்தார்.

இதை நாம் நம்புகிறோம்.

சிறிதேனும் அறிவுடைய மனிதர்கள் யாரும் அத்தகைய ஓர் அசுரத் திட்டத்தை வகுத்திருக்க மாட்டார்கள்.

மக்களின் கவனத்தைக் கவர வேண்டுமென்ற நோக்கம் கொண்டு ஓர் இயக்கம் ஆரம்பித்த சமயத்தில், சில கயவர்கள் இம்மாதிரி காரியங்களைச் செய்து விட்டார்களே என்று தி. மு. கழகத்தார் வெட்கமும் துக்கமும் அடைந்திருப்பதுதான் இயல்பு.

சட்டசபையில் அவசரப் பிரேரணை கொண்டு வந்து பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் மேற்படி செயல்களைக் குறித்துத் தங்கள் அருவருப்பை வெளியிடவில்லையென்றால், அதிலிருந்து, அத்தகையவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நண்பர்கள் அல்ல என்றுதான் ஏற்படுகிறது.

பொறுப்பு யாருடையது என்பது பற்றி நாம் இப்போது ஆராய்ச்சி செய்ய விரும்பவில்லை.

வருங்காலத்தில் இத்தகைய சம்பவங்கள் ஏற்படாமல் தடுப்பதற்கு வழிகள் என்ன என்பது பற்றியேதான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

* * *

ஜனநாயக ஆட்சி நடக்கும் நாடுகள் பலவற்றிலும் அரசியல் அதிகாரத்துக்காக அவ்வப்போது கட்சிகளும் கோஷ்டிகளும் போராட்டம் நடத்திக் கொண்டுதானிருக்கும்.

ஜனநாயக முறையில் பழுத்து முதிர்ந்த இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய சில தேசங்களிலேதான் அரசியல் கட்சிகளின் போராட்டங்கள் அமைதியாக நடைபெற்று வருகின்றன.

ஜனநாயகத்தைப் புதிதாக அடைந்திருக்கும் நாடுகளில் கட்சிப் போராட்டங்களும் கோஷ்டிப் பூசல்களும் பல சமயங்களில் கட்டு மீறிப் போவதுண்டு. அடிதடி பலாத்காரங்கள் நடப்பதும் உண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களில் எந்தக் கட்சி அரசாங்கம் நடத்தினாலும், போலீஸார் அமைதியை நிலைநாட்டவே வேண்டியிருக்கும்.

ஆனால் இத்தகைய பலாத்கார நிகழ்ச்சிகள் அரசியல் போராட்டங்களை நடத்துவோருக்கிடையில் நடக்குமே தவிர, நாகரிகம் அடைந்த மக்கள் வாழும் எந்த நாட்டிலும் வீடுகளில் உள்ள குற்றமற்ற ஸ்திரீகளையும் குழந்தைகளையும் அப்போராட்டங்கள் பாதிப்பதில்லை.

அப்படிப் பாதிக்கும்படியாக ஒரு ஜன சமூகத்தில் சிலரோ, பலரோ நடந்து கொண்டார்களென்றால், அவர்களை மானிடப் பண்பு உள்ள மக்களாகக் கருத முடியாது.

ஆதலின், தமிழ் நாட்டுக்கும் தமிழர்களுக்கும் உலகத்தின் முன்னிலையில் இத்தகைய மானிடப் பண்பற்ற அந்தஸ்து ஏற்படாமல் தடுக்க விரும்புவோர் அனைவரும், எப்பேர்ப்பட்ட அரசியல் கொந்தளிப்பான நிலைமையிலும் தூத்துக் குடியில் நடந்தது போன்ற சம்பவங்கள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

* * *

காலாடிகளும் கயவர்களும், கொள்ளைக்காரர்களாகவும் கொலைகாரர்களாகவும் மாறித் தங்கள் திமிர்த் திருவிளையாடல்களை நடத்த முடியாமல் தடுப்பது முக்கியமாக அரசாங்கத்தின் கடமையாகும். எந்தக் கட்சி அரசாங்கம் நடத்தினாலும் அந்தக் கடமையை ஏற்று நடத்த வேண்டும். யார் மந்திரியா யிருந்தாலும் அந்தப் பொறுப்பை வகித்தே தீர வேண்டும்.

போலீஸ் இலாகாவின் மூலமாகவே எந்த அரசாங்கமும் மேற்படி பொறுப்பைத் திறமையாக நிறைவேற்ற முடியும்.

ஜனநாயக ஆட்சியின் கீழ் ஜனநாயகத்தை நிலை நிறுத்தும் கடமை போலீஸ் இலாகாவினுடையது. அந்தக் கடமையைப் போலீஸார் நன்கு நிறைவேற்றுவதற்கு யாரும் குறுக்கே நிற்கக்கூடாது.

தனிப்பட்ட போலீஸ்காரர் எவரும் லஞ்சம் வாங்குதல் முதலிய குற்றத்தைச் செய்தால், அதற்குரிய தண்டனையை அநுபவிக்க வேண்டும் என்று வற்புறுத்த வேண்டியது மக்களின் கடமை. திறமைக் குறைவினால் தங்கள் கடமையை நன்கு நிறைவேற்றாத போலீஸார்களைக் குறை கூறுவதற்கும் மக்களுக்கு உரிமை உண்டு.

ஆனால் தேசத்தில் குழப்பத்தைத் தடுத்து அமைதியை நிலை நாட்டும் விஷயத்தில் போலீஸார் தங்கள் மனச்சாட்சிக்கு உகந்த முறையில் காரியம் செய்தால், அவர்களைத் தாங்கி நிற்பது மக்களின் கடமையாகும். போலீஸார் அமைதியை நிலை நாட்டும் பொருட்டுக் கையாளும் நடவடிக்கைகளைக் குறுகிய நோக்கம் உள்ள அரசியல் வாதிகள் கண்டித்துக் கிளர்ச்சி செய்ய இடம் கொடுத்தோமானால், பிறகு எந்தப் போலீஸ்காரர் மனத்திலும் உறுதி இல்லாமற் போய்விடும். குழப்பத்தைத் தடுத்து அமைதியை நிலை நாட்டும் காரியத்தில் சந்தேகமும் மனக் குழப்பமும் ஏற்பட்டுவிட்டால், போலீஸார் தங்கள் கடமையைச் சரிவரச் செய்ய முடியாது. அராஜகம் என்னும் படுகுழியை நோக்கி ஜனநாயகத்தின் பிரயாணம் தொடங்கி விட்டது என்று வைத்துக்கொள்ளலாம்.

* * *

ஒரு தேசத்தின் பிரஜைகள் கயவர்களாலும் காலிகளாலும் தாக்கப்படாமல் பாதுகாப்பது முக்கியமாகப் போலீஸின் பொறுப்பேயாகும்.

ஆனால் போலீஸின் தலையிலே மட்டும் பொறுப்பைச் சுமத்திவிட்டு மற்றவர்கள் எல்லாரும் சும்மா இருப்பது மடைமையாக முடியும்.

ஆகையால் நாட்டின் நல் வாழ்வில் சிரத்தை கொண்ட அறிவுடைய மக்கள் அனைவரும் கயவர்கள்—காலிகளின் தாக்குதலை எதிர்த்துத் தாக்கித் தற்காப்புச் செய்து கொள்ள எப்போதும் சித்தமா யிருக்க வேண்டும். போலீஸார் வந்து சேரும் வரையில் எதிர்த்து நிற்பதற்காவது அனைவரும் தயாரா யிருக்க வேண்டும்.

சென்ற இரண்டு வருஷ காலமாகத் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் ஏற்பட்டிருக்கும் தேசிய இளைஞர் ஸ்தாபனங்கள் ஊர்காப்பு ஸ்தாபனங்களாகவும் பணி ஆற்ற வேண்டும்.

ஏற்கெனவே அவ்வித தேசிய முன்னணி ஸ்தாபனம் இல்லாத இடங்களில் புதிதாக ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

முக்கியமாக, இளைஞர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு "வஸ்தாத்" ஆகப் பயில வேண்டும்.

மூளையை வறட்டிக்கொண்டு படித்துப் பரீட்சையில் முதன்மையாகத் தேறுவதினால் மட்டும் என்ன பயன்! பெண்டாட்டி பிள்ளைகளைக் கயவரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாதவர்கள் எத்தனை படித்து எத்தனை கெட்டிக்காரர்களா யிருந்துதான் என்ன பிரயோஜனம்!

"ஆறிலும் சாவு நூறிலும் சாவு" "வீரன் ஒரு முறை சாவான்; கோழை பல முறை சாவான்" என்று படித்ததெல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக்காயாக மட்டும் இருந்தால், இனி வாழ்க்கை நடத்த முடியாது.

* * *

கடைசியாக, தமிழ்நாட்டுச் சகோதரிகளுக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறோம்.

"நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்!" என்றார் கவியரசர் பாரதியார்.

நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்னும் பழைய காலத்துப் பெண்மைக்குரிய குணங்களை இக்காலத்தில் அளவறிந்துதான் வைத்துக் கொள்ள வேண்டும்.

தூத்துக்குடியில் நடந்ததுபோன்ற சம்பவங்கள் நடக்கும் போலிருந்தால், நாணத்தையும் அச்சத்தையும் மேற்கொள்வது பெருங் குற்றமாகும்.

அத்தகைய சந்தர்ப்பங்களில் தமிழ் நாட்டுப் பெண்மணிகள் அனைவரும் கன்னித் தெய்வங்களாக மாறிவிட வேண்டும்.

புருஷர்கள் எப்போதும் வீட்டிலேயே இருக்க மாட்டார்கள். அவரவர்களும் காரிய நிமித்தமாக வெளியே போவார்கள்.

அத்தகைய சமயங்களில் காலிகளும் கயவர்களும் தாக்க வந்தார்கள் என்றால், நம் சகோதரிகள் நாணத்தையும் அச்சத்தையும் மற்றப் பெண்மைக் குணங்களையும் ஒதுக்கி வைத்து விட்டுத் தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்கத் தயாராக வேண்டும்.

கையிலே அகப்படும் அரிவாள்மணை, கடப்பாறை, உலக்கை, விளக்குமாறு முதலிய எல்லா வித ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு கயவர்களைத் திருப்பித் தாக்கித் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும்.

கயவர்களும் காலாடிகளும் பெரும்பாலும் பயங் கொள்ளிக் கோழைகளாகவே இருப்பார்கள். இல்லாவிடில் அவர்கள் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் தாக்க முன் வருவார்களா!

பாகிஸ்தான் பிரிவினைக் கலவரங்களின்போதே இதைப் பார்த்தோம். கொலை பாதகமான கொடூரச் செயல்களைச் செய்த ராட்சதர்கள்கூட எதிர்ச் சமூகத்தினர் பயந்து ஓடுகிற வரையில் தான் அவர்களைக் கொடுமைப் படுத்தினார்கள்.

தாக்கப்பட்ட சமூகத்தினர் திருப்பித் தாக்க ஆரம்பித்ததும் ஓட்டம் எடுத்தார்கள்.

இந்த உதாரணத்தை நினைத்துக் கொண்டு தமிழ்நாட்டுச் சகோதரிகள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக்கொள்வதற்குத் தயாராகவேண்டும்.

'வெளியில் சொன்னால் வெட்கம்" என்ற அசட்டுத்தனம் கூடவே கூடாது.

மிருகங்களும் செய்யத் துணியாத இழி செயல்களைச் செய்ய முன்வரும் நீசக் கீழ்மக்கள் அல்லவா வெட்கப்பட வேண்டும்!

கொடுமைக்கு ஆளான ஸ்திரீகள் உண்மையில் வெட்கப்படவே கூடாது. தங்களுக்கு நேர்ந்த அபாயங்களை எடுத்துச் சொல்லி உதவி கோருவதில் பின்வாங்கவே கூடாது.

அதைக் காட்டிலும், உதவி கோருவதற்கே இடமில்லாமல் முன்னாலேயே துணிச்சலைக் கடைப்பிடிப்பது நல்லது.

கண்ணகியையும், ஜான்ஸி ராணியையும் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் அடிக்கடி நினைத்துக் கொள்வது அவசியமாகும். வருங்காலத்தில் அவசியம் நேரும்போதெல்லாம் கண்ணகி போலவும் ஜான்ஸிராணி போலவும் நடந்து கொள்வதற்கும் தமிழ்நாட்டுச் சகோதரிகள் சித்தமாக வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

# பண மழை பொழிந்தது!

“கொடுக்கிற தெய்வம் கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்” என்பார்கள்.

வானமாகிற கூரையைப் பொத்துக் கொண்டு கொட்டுவதுபோல் இவ்வருஷம் மேற்குக் கடற்கரையில் மழை பெய்திருக்கிறது.

அதுபோலவே சென்னை ராஜ்ய சர்க்கார் கேட்ட கடன் திட்டத்தை ஜனங்கள் பண மழை பெய்து பூர்த்தி செய்திருக்கிறார்கள்.

"ஐந்து கோடி கேட்டதற்கு ஏழரைக் கோடி கிடைத்தது" என்று சென்ற இதழில் எழுதியிருந்தோம். அந்த இதழ் நேயர்களின் கைக்குக் கிடைப்பதற்கு முன்னால் வசூலான தொகை ஒன்பது கோடி ஆகிவிட்டது. கடைசியாகக் கணக்குப் பார்க்கும்போது ஜூலை மீ 23உ-க்குள் 10 கோடி 80 லட்சம் வசூலானதாகத் தெரிகிறது.

* * *

கடன் கேட்ட காலத்தில் இம்மாகாணத்தின் சூழ் நிலையைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம். எங்கும் 'பண முடை' என்று பேசப்படுவதையும் எதிர்க் கட்சிக்காரர்கள் சமயம் பார்த்துத் தொடங்கியிருந்த ஆர்ப்பாட்டக் கிளர்ச்சிகளையும் பற்றிச் சொல்லியிருந்தோம்.

எல்லாவற்றிலும் முக்கியமான ஒரு நீச விஷமப் பிரசாரத்தைப் பற்றிச் சென்ற வாரத்து இதழில் குறிப்பிடவில்லை.

சென்னை இராஜ்யத்துக்கும் இந்த இராஜ்யத்தின் மக்களுக்கும் துரோகம் என்று சொல்லக் கூடிய அந்த நீச விஷமப் பிரசாரம் சென்னை சர்க்காரின் நாணயப் பொறுப்பையே தாக்கியது.

ரிஸர்வ் பாங்கியிலிருந்து இந்திய சர்க்காரின் பணத்தில் பதினாறு கோடி ரூபாயைச் சென்னை சர்க்கார் 'கையாடல்' செய்து விட்டார்கள் என்ற பொருள் படும்படி எழுதினார்கள்.

ராஜாஜி மாஜி கவர்னர் ஜெனரல் ஆயிற்றே என்று சென்னை சர்க்காரை இந்திய சர்க்கார் சும்மா விட்டார்கள் என்றும், இல்லாவிட்டால் சென்னை மந்திரிகளை 'டிஸ்மிஸ்' செய்து அவர்களைக் கைதிக் கூண்டில் ஏற்றி வைத்திருப்பார்கள் என்றும் கூறினார்கள்.

இது எத்தகைய முட்டாள்தனமான குற்றச் சாட்டு என்பது அரசியலிலும் பொருளாதாரத்திலும் சிறிதேனும் அறிவுள்ளவர்களுக்குத் தெரியும். ஆனால் அதிகமாக இந்த விஷயங்களில் அநுபவமில்லாத பொது ஜனங்களை இப்படிப் பிரசாரம் செய்து பயப்படுத்தி வைக்கலாம் என்று பார்த்தார்கள். சென்னை சர்க்கார் கடன் கேட்டால் வசூலாகாமல் போக வேண்டும் என்ற எண்ணத்துடனேயே செய்தார்கள்.

ரிஸர்வ் பாங்கியின் சாவி சென்னை சர்க்காரின் கையில் இருக்கிறதா? அல்லது ரிஸர்வ் பாங்கியின் பொக்கிஷப் பெட்டியைச் சென்னை சர்க்கார் உடைத்துப் பணத்தை எடுத்துக் கொண்டுவிட முடியுமா? இந்திய சர்க்காரின் அநுமதியின்றி ஒரு காலணாவேனும் ரிஸர்வ் பாங்கியிலிருந்து சென்னை சர்க்காருக்குக் கிடைத்து விடுமா?

லிமிடெட் கம்பெனி ஏற்படுத்துகிறோம் என்று சொல்லி ஊரிலுள்ளவர்களிடமெல்லாம் பணத்தை வசூலித்து விழுங்கி ஏப்பம் விட்டு விட்டுப் பணம் கொடுத்தவர்களுக்குக் கையை விரிக்கிறார்களே, அந்தமாதிரி காரியமா சர்க்காரின் பொருளாதார நிர்வாகம்?

இந்திய சர்க்காருக்கும் சென்னை சர்க்காருக்கும் ஒரு தகராறு இருக்கிறது என்பது உண்மை. அதன் விவரம் என்ன?

ஐந்து வருஷ காலமாக இந்த இராஜ்யத்தில் சேர்ந்தாற்போல் மழையில்லை.

இது காரணமாகச் சென்னை இராஜ்யத்தின் சில பகுதிகளில் கடுமையான பஞ்சம் பரவியிருந்தது. ராஜாஜி சர்க்கார் ஏற்பட்ட சமயத்தில் இந்தப் பஞ்சம் உச்ச நிலையை அடைந்திருந்தது.

அப்போது ராஜாஜி சர்க்கார் ஏற்படாவிட்டால் வங்காளப் பஞ்சத்தில் மடிந்ததுபோல் இந்த ராஜ்யத்தில் லட்சக் கணக்கான ஜனங்கள் பசி பட்டினியால் மடிந்திருப்பார்கள். துவேஷப் பிரசாரப் பத்திரிகைகளின் விசேஷ பிரேத நிருபர்கள், இயற்கை மரணம் அடைந்தவர்களைப் படம் பிடித்துப் 'பட்டினிச் சாவு' என்ற தலைப்பில் போடவேண்டிய அவசியம் நேர்ந்திராது. உண்மையான பட்டினிச் சாவுகளையே ஆயிரக் கணக்கில் படம் எடுத்துப் போட்டிருக்கலாம்.

ராஜாஜி சர்க்கார் வந்து அம்மாதிரி விபத்து நேராமல் தடுத்தார்கள். பஞ்சப் பிரதேசங்களில் ஆயிரக்கணக்கான கஞ்சி நிலையங்களை வைத்து நடத்தினார்கள். இதற்குக் கோடிக் கணக்கான பணம் தேவையாயிருந்தது. மற்றொரு பக்கத்தில் பஞ்சத்தில் அடிபட்ட பிரதேசங்களில் நிலவரி வஜா தாராளமாகச் செய்யவேண்டி வந்தது. பஞ்ச நிலைமை காரணமாக, விற்பனை வரி முதலிய இனங்களில் வருமானமும் குறைந்தது.

இப்படி மூன்று திசைகளில் ஏற்பட்ட பொருளாதாரத் தாக்குதலை வேறு யாராலும் சமாளித்திருக்க முடியாது. அந்த நெருக்கடியான நிலைமையில் ராஜாஜி இராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அவர்தான் பணத்துக்கு என்ன செய்ய முடியும்! மரங்களிலிருந்து பணம் காய்க்கச் செய்ய முடியுமா! இத்தகைய அசாதாரண நிலைமையில் பஞ்ச நிவாரணத்துக்கு வேண்டிய பணம் கொடுத்து உதவுவது இந்திய சர்க்காரின் கடமை என்று வற்புறுத்தினார். வேறு ஒருவராயிருந்தால் கடிதப் போக்குவரவி

லேயே காலம் கழிந்து போயிருக்கும். அதற்குள் ஜனங்களும் மடிந்து போயிருப்பார்கள்.

ராஜாஜியானபடியால் இந்திய சர்க்கார் இல்லையென்று சொல்ல முடியவில்லை. நிதி மந்திரி தேசமுக் "கடனாகக் கொடுக்கிறோம்" என்றார். "அது நியாயமில்லை. இந்திய சர்க்கார் நன்கொடையாகவே கொடுத்து உதவ வேண்டும்" என்று ராஜாஜி வற்புறுத்தினார்.

ஜவாஹர்லால்ஜி குறுக்கிட்டு, "இப்போது ராஜாஜி கேட்கிற பணத்தைக் கொடுத்து விடுங்கள். கடனா, நன்கொடையா என்பதைப் பின்னால் தீர்த்துக் கொள்ளலாம்!" என்றார்.

அம்மாதிரியே இந்திய சர்க்காரிடம் பதினாறு கோடி ரூபாய் வரையில் பெற்றுச் சென்னை சர்க்கார் பஞ்சத்தில் அடிபட்ட லட்சக்கணக்கான மக்களின் உயிரைக் காப்பாற்றினார்கள். வரி வஜா முதலியனவும் தாராளமாகச் செய்தார்கள்.

அந்தப் பதினாறு கோடி ரூபாயும் கடனா, நன்கொடையா, அல்லது ஒரு பகுதியைக் கடனாகவும் இன்னொரு பகுதியை நன்கொடையாகவும் வைத்துக்கொள்ளலாமா என்ற பிரச்னை இன்னும் தீரவில்லை. இந்தப் பிரச்னை முடிவான பிறகுதான் இந்திய சர்க்காரிடம் பணம் பெறுவது என்று வைத்துக் கொண்டிருந்தால் பஞ்ச நிவாரணம் செய்திருக்க முடியாது.

இவ்விதம் அவசர நிலைமைக்கேற்றபடி துரிதமான நடவடிக்கை எடுத்து இந்திய சர்க்காரை வற்புறுத்திப் பணம் பெற்று லட்சக்கணக்கான ஜனங்களின் உயிரைக் காப்பாற்றியது ராஜாஜி சர்க்கார் செய்த அரும் பெரும் சேவையாகும். அரசாங்க சரித்திரத்திலேயே பொன்னெழுத்தில் பொறிக்க வேண்டிய காரியமாகும்.

இந்த நிலைமையை விஷமத்தனமாகத் திரித்துக் கூறி, சென்னை ராஜ்ய சர்க்கார் ரிஸர்வ் பாங்கி பணத்தைக் 'கையாடி விட்டு'த் திண்டாடுகிறார்கள் என்று பிரசாரம் செய்தவர்கள், இந்த ராஜ்ய மக்களுக்கு மகத்தான துரோகம் செய்த பாதகர்கள் ஆவார்கள்.

அந்தப் பிரசாரத்தை மக்கள் யாரும் பொருட்படுத்தவில்லை. சென்னை சர்க்காரின் பொருளாதாரப் பொறுப்பில் பூரண நம்பிக்கை வைத்து ஐந்துகோடி கடன் கேட்டதற்குப் பத்துகோடிக்கு மேல் பணமழையாகச் சொரிந்தார்கள்.

இந்தப் பணத்தைக் கொண்டு நாட்டின் வளத்தைப் பெருக்குவதற்குரிய பல முன்னேற்றமான நிர்மாணத் திட்டங்களை நடத்த முடியும் என்று சென்னை சர்க்கார் எதிர்பார்க்கிறார்கள்.

நிர்வாகத் துறையில் ராஜாஜி சர்க்காரின் புகழை என்றென்றும் நிலைநாட்டுவதற்கு இதை விட ஒன்றுமே வேண்டியதில்லை.

# சமதர்ம இலட்சியத்துக்கு உதவுங்கள்!

வட இந்தியாவில் பல இடங்களிலும் காங்கிரஸ் ஆட்சியின் மீது அதிருப்தி வளர்ந்து வருவதாகக் காண்கிறது. அதுபோலவே பிரஜா—சோஷலிஸ்ட் கட்சியின் செல்வாக்கு வளர்ந்து வருவதாகவும் தோன்றுகிறது. சமீபத்தில் நடந்த பல உபதேர்தல்களில் காங்கிரஸ் அபேட்சகர்களை முறியடித்துப் பிரஜா—சோஷலிஸ்டுகள் வெற்றியடைந்திருக்கிறார்கள்.

காங்கிரஸ் ஆட்சியின் கீழ் வறுமையை ஒழிப்பதற்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கும் பொருளாதார ஏற்றத் தாழ்வைக் குறைப்பதற்கும் போதிய பிரயத்தனங்கள் எடுக்கப் படவில்லை என்ற அபிப்பிராயம் பரவி வருகிறது. இதன் அறிகுறியே பிரஜா—சோஷலிஸ்டுகளின் வெற்றிகளில் வெளியாகிறது.

பிரஜா — சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்கள் தங்களுக்குள் இருக்கும் சிறிய வேற்றுமைகளை மிகைப்படுத்திக் கொள்ளாமல், கட்சியை மேலும் பலப்படுத்தித் தீவிரமான பிரசாரமும் செய்து வந்தால், விரைவிலேயே அவர்களுடைய பலம் பெருகும் என்பது நிச்சயம்.

* * *

தமிழ் நாட்டிலேயுங்கூட சோஷலிஸ்ட் கட்சியைப் பலப்படுத்துவதற்குப் பிரயத்தனங்கள் செய்யப்படுவது அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

தமிழ் நாட்டில் சோஷலிஸ்டு கட்சிக்குரிய முக்கியமான அநுகூலம், அக்கட்சி தன்னலம் கருதாமல் பணியாற்றும் சுமார் ஐந்நூறு தொண்டர்களைப் பெற்றிருப்பதாகும்.

இந்தத் தொண்டர்கள் சோஷலிஸ்டு கட்சியின் சமதர்ம இலட்சியத்தை ஜனங்களிடையே பிரசாரம் செய்ய முயன்று வருகிறார்கள். சிற்சில இடங்களில் ஏழை மக்களின் குறைகளைத் தெரிந்து கொண்டு பரிகாரம் தேடப் பெருமுயற்சி செய்து வெற்றியும் அடைந்திருக்கிறார்கள்.

அவர்களுடைய முக்கியமான பலவீனம் ஸ்தாபனத்தை நடத்தவும் பிரசார வேலை செய்யவும் கூடப் பணமில்லாமலிருக்கும் குறைதான்.

'சமதர்மம்' 'சோஷலிஸம்' என்ற வார்த்தைகளைக் கேட்டாலே பணக்காரர்களும் சுமாரான வசதியுள்ளவர்களும் கூட ஒதுங்கி விடுவார்கள்.

தொழிற் சங்கங்கள், கிஸான் சங்கங்கள் அமைத்து, அவர்களிடம் சந்தா சேர்த்துப் பணம் சேர்க்கும் காரியமும் சோஷலிஸ்ட் கட்சிக்குப் பிடிப்பதில்லை. ஸ்ரீ ஜயப் பிரகாச் நாராயணன் இதற்கு விரோதமா யிருக்கிறார்.

"நாங்கள் அரைப் பட்டினி இருந்து வேலை செய்யத் தயாரா யிருக்கிறோம். ஆனால் துண்டுப் பிரசுரம் அச்சிடவும் பொதுக் கூட்டம் நடத்தவும் கூடப் பணம் இல்லையே! என்ன செய்வோம்!" என்று சோஷலிஸ்ட் தொண்டர்கள் கேட்கிறார்கள்.

சோஷலிஸ்ட் கட்சிக்கு ஆகஸ்டு மாதம் ஒரு முக்கியமான மாதம். 1942 ஆகஸ்டு இயக்கத்தில் இந்தியா தேசமெங்கும் சோஷலிஸ்டுகள் அரும் பெரும் தீரச் செயல்கள் புரிந்ததை நாம் என்றும் மறக்க முடியாது.

ஆகஸ்டு மாதத்தில் சோஷலிஸ்ட் கட்சிக்கு அதிகமான அங்கத்தினர் சேர்ப்பதற்கு ஒரு பெரு முயற்சி நடைபெறும் என்று அறிகிறோம்.

கட்சியின் ஸ்தாபன வேலைகளை நன்கு நடத்துவதற்காக ஆகஸ்டு இயக்கம் ஆரம்பமான 9உயன்று சோஷலிஸ்ட் கொள்கையில் ஆர்வமுள்ள ஒவ்வொருவரும் தலைக்கு ஒரு ரூபாய் நன்கொடை அளிக்க வேண்டும் என்று சோஷலிஸ்ட் கட்சி நிர்வாகிகள் கோருகிறார்கள்.

இந்தக் கோரிக்கையை நாம் முழு மனதுடன் ஆதரிக்கிறோம். சமதர்ம இலட்சியப் பிரசாரத்துக்காகச் சோஷலிஸ்ட் கட்சி ஸ்தாபனத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் காரியதரிசி, சோஷலிஸ்ட் கட்சி, திருவல்லிக்கேணி, சென்னை என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும்.

ஆகஸ்டு 9உ. சேரும்படியாக ஒவ்வொரு ரூபாய் வீதம் அனுப்பி வைத்தால் பண உதவியுடன் கூடப் பலருடைய ஆதரவு சோஷலிஸ்ட் இலட்சியத்துக்கு இருக்கிறது என்று உணர்ந்து அந்தக் கட்சியின் நிர்வாகிகள் மேலும் உற்சாகத்துடன் வேலை செய்வார்கள் அல்லவா!

# ஜம்பியின் “லிவர்க்யூர்”

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு

### பிரதி மாதாந்திர விஜயம்

**நோயாளிகளின் நன்மையை உத்தேசித்து கீழ்க்கண்ட ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு மாதத்திலும் குறிப்பிட்ட தேதிகளில் காலை 9 முதல் 11 மணி வரையிலும் மாலை 3 முதல் 5 மணி வரையிலும் எமது டாக்டர் ஆலோசனை கூறுவதற்குத் தயாராக இருப்பார். மாறுதல்கள் இருப்பின் அவ்வப்போது அறிவிக்கப்படும்**

| இடம் | தேதி | விலாசம் : |
|---|---|---|
| கரூர் | 3 | மெஸர்ஸ். சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் (மாலை 3 முதல் 5 மணி வரை) |
| ஈரோடு | 4 | மெஸர்ஸ். ஸ்ரீ கிருஷ்ணா & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் (காலை 9 முதல் 11 மணி வரை) |
| சேலம் | 5 | மெஸர்ஸ். தி சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிட். |
| கோயமுத்தூர் | 6 | மெஸர்ஸ். ஈஸ்வர் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் |
| பாலக்காடு | 7 | மெஸர்ஸ். நாதம் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் |
| தஞ்சாவூர் | 9 | ராஜா சத்திரம் |
| மன்னார்குடி | 10 | மெஸர்ஸ். மீனா கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 11 | விசாரிக்குமிடம் : மெஸர்ஸ். சுப்பய்யா மெடிகல் ஹால் அல்லது தி மெடிகல் எம்போரியம், விஜயபுரம் |
| நாகப்பட்டினம் | 12 | எஸ். டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| மாயவரம் டவுன் | 13 | ராமகிருஷ்ண வைத்தியசாலை, கிருஷ்ண ராயர் சந்து |
| சிதம்பரம் | 14 | மெஸர்ஸ், ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி |
| கடலூர் என். டி. | 15 | கமலா & கம்பெனி, கெமிஸ்ட்ஸ், புதுப்பாளையம் |
| விழுப்புரம் | 16 | மெஸர்ஸ். சி. குபேந்திர செட்டி & சன்ஸ் |
| புதுக்கோட்டை | 18 | வஸந்தா லாட்ஜ் |
| காரைக்குடி | 19 | மெஸர்ஸ். ஏ. வி. & சன்ஸ். டிராவலர்ஸ் ரூம்ஸ் |
| மதுரை | 21 & 22 | மெஸர்ஸ். டி. என். சி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை தெரு |
| திருநெல்வேலி | 24&25 | தி சந்திரா விலாஸ், போர்டிங் & லாட்ஜிங், திருநெல்வேலி ஜங்ஷன் |
| காஞ்சிவரம் | 27 | 86, சாலைத் தெரு, |
| வேலூர் | 28 | வி. பி. சிவம் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ், லாங் பஜார் |

**மற்ற இடங்களில் விஜயம் செய்யும் நாளை எதிர்பாருங்கள்**

**கூடிய சீக்கிரம் விஜயவாடாவில் எங்கள் புதிய கிளை ஆபீஸ் ஒன்று ஆரம்பித்து எங்கள் டாக்டர் எப்பொழுதும் ஆலோசனை கூறுவதற்குத் தயாராக இருப்பார்.**

**சென்னையில் ஆலோசனை கூறும் நேரம்**

| இடம் | நேரம் |
|---|---|
| மயிலாப்பூர், “ஜம்பி பில்டிங்ஸ்” கிளினிக் ராயப்பேட்டை ஹைரோடு | காலை 7-30 முதல் 11 வரை; மாலை 3 முதல் 5 வரை ஞாயிற்றுக்கிழமைகளில் காலையில் மட்டும் |
| கோடம்பாக்கம். ஆர்க்காட் ரோடு, ஜம்பி பார்மசூட்டிகல்தொழிற்சாலையில் புதன், சனிக்கிழமைகளில் ... | மாலை 4-30 முதல் 5 மணிவரை (12 - 8 - 53 முதல்) |
| மாம்பலம். சாம்பசிவன் தெரு, ஜம்பி பில்டிங்ஸ் ஆஸ்பத்திரியில் புதன், சனிக்கிழமைகளில் ... ... | மாலை 5-15 முதல் 6 மணிவரை (12 - 8 - 53 முதல்) |

○●○

## ஜம்பி வெங்கடரமணய்யா & ஸன்ஸ், சென்னை-4

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 32

## இறுதிக் கட்டம்

நந்தினி திரும்பிச் சென்று தனது அறைக்குள் வருவதற்காக ஏற்பட்ட பிரதான வாசலின் கதவைச் சாத்தித் தாளிட்டு வந்தாள். பின்னர், கையில் தீபத்துடன் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தாள்.

மந்திரவாதி ரவிதாஸன் முன்னமே கோரமான முகமுடையவன். முகத்திலும் தலையிலும் புதிதாக ஏற்பட்டிருந்த காயங்களினால் அவனுடைய தோற்றம் மேலும் கோரமடைந்திருந்தது.

நந்தினி அதைப் பார்த்து விட்டு, "மந்திரவாதி! இது என்ன, உன் உடம்பெல்லாம் புதுக் காயங்கள்?" என்றாள்.

"ராணி! இதிலே தங்களுக்கு வியப்பு என்ன? தங்களைப் போல் நாங்கள் அறுசுவை உண்டி அருந்தி பஞ்சணை மெத்தையில் சொகுசாய்ப் படுத்துக் காலங் கழிப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்களா? நானும் பரமேசுவரனும் இன்று பிழைத்து வந்திருப்பதே பெரிய காரியம். இறந்து போன பாண்டிய சக்கரவர்த்தியின் ஆவிதான் எங்களை இன்று உயிரோடிருக்கும்படி காப்பாற்றியது......"

"இல்லை, ரவிதாஸா! இல்லை! அவருடைய ஆவி என்னுடனேயே சதா சர்வ காலமும் இருக்கிறது. ஒரு நாழிகைக்கு முந்திக்கூட என் முன்னால் தோன்றிச் 'சபதத்தை நிறைவேற்றப் போகிறாயா! இல்லையா?' என்று கேட்டது."

"ராணி! அதற்குத் தாங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?"

"சபதத்தை இன்று நிறைவேற்றுவேன்; இல்லாவிடில் உயிரை மாய்த்துக்கொள்வேன் என்று சொன்னேன்."

"அப்படியானால் நாங்கள் ஓடோடியும் வந்ததே நல்லதாய்ப் போயிற்று. இத்தனை காலங் கழித்து நீங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளுவதில் யாருக்கு என்ன லாபம்? எடுத்த காரியம் அல்லவோ முடிவு பெறவேண்டும்? தங்களால் முடியாது என்றால் ..."

"முடியாது என்று யார் சொன்னார்கள்? சபதத்தை நிறைவேற்றுவேன்; அதற்குப் பிறகு என்னுடைய உயிரை மாய்த்துக் கொள்வேன் ..."

"வேண்டாம், வேண்டாம். சபதத்தை நிறைவேற்றிய பிறகு தாங்கள் செய்யக் கூடிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. மதுரையில் வீரபாண்டியனுடைய திருக்குமாரனுக்கு உலகமறியப் பட்டாபிஷேகம் செய்தாக வேண்டும்..."

"அதையெல்லாம் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். இன்று இரவு என் வேலை முடிந்து விடும்; என் வாழ்வும் முடிந்து விடும் ..."

"ராணி! பழுவேட்டரையருடைய பொக்கிஷத்தில் உள்ள திரவியங்கள் எல்லாம் மலைநாட்டுக்குப் போய்ச் சேர வேண்டும். அதற்குத் தங்கள் உதவி தேவையாயிருக்கிறது!"

"சபதம் முடிந்த பின்னரும் என் கணவரை ஏமாற்றிக் கொண்டு உயிர் வாழச் சொல்கிறாயா, மந்திரவாதி!"

"அம்மணி! தங்கள் கணவர் யார்?"

"உலகறிய என்னை மணந்து, நாடு நகரங்களில் உள்ளவர்களின் பரிகாசங்

களை யெல்லாம் பொருட் படுத்தாமல், என் ஒவ்வொரு சபலத்தையும் நிறை வேற்றிக் கொண்டு வருகிற உத்தமரைத் தான் சொல்கிறேன்......"

"ராணி! பழுவேட்டரையர் தங்கள் கணவர் அல்ல. ஒவ்வொரு நாள் இரவும் வீர பாண்டியர் என் கனவில் வந்து தங்களை அவருடைய பட்டமகிஷியாக நடத்தும்படி கட்டளையிடுகிறார்......"

"மந்திரவாதி! அவர் பேச்சு வேண்டாம். இந்தக் காயங்களெல்லாம் உனக்கு எப்படி ஏற்பட்டன என்று சொல்ல வில்லையே?"

"நேற்றிரவு கொள்ளிடக் கரைக் காட்டில் எங்களை ஒரு கிழப்புலி தாக்கியது. கிழப் புலியானாலும் பற்களும் நகங்களும் மிக்க கூராயிருந்தன......"

"எப்படித் தப்பி வந்தீர்கள்?"

"பாண்டிய குமாரருக்குப் பட்டாபிஷேகம் நடத்தினோமே? அந்தப் பள்ளிப்படை கோபுரத்தில் இடிந்திருந்த பகுதியை அந்தப் புலியின் பேரில் தள்ளி விட்டுத் தப்புவித்து வந்தோம்......"

"ஐயோ! பாவம்! கிழப் புலியைக் கூட நீங்கள் நேர் நின்று சண்டையிட்டு ஜயிக்க முடியவில்லை......!"

"ஆம், ராணி! ஒப்புக் கொள்கிறோம். அப்படி யிருக்கும்போது இளம் புலியாகிய ஆதித்த கரிகாலனை நேருக்கு நேர் எதிர்ப்பது எப்படி? அதனாலேதான் தந்திர மந்திரங்களைக் கையாள வேண்டி யிருக்கிறது. தேவி! இன்றிரவு தப்பினால் அப்புறம் நமக்குச் சந்தர்ப்பம் கிட்டப் போவதில்லை. சுந்தரசோழனையும் அருள்மொழி வர்மனையும் பற்றிச் செய்தி வந்து விட்டால், பிறகு ஆதித்த கரிகாலன் நம்மிடம் அகப்படப் போவ தில்லை......" என்றான் ரவிதாஸன்.

"மந்திரவாதி! அவர்களைப் பற்றி என்ன? ஏதாவது நிச்சயமாகத் தெரியுமா?" என்று கேட்டாள் நந்தினி.

"இத்தனை நேரம் அவர்களுடைய ஆயுள் முடிந்திருக்கும், சந்தேகமில்லை..."

"நீயும் தேவராளனும் ஈழத்துக்குப் போனபோது இப்படிச் சொல்லி விட்டுத்தான் போனீர்கள்."

"அங்கே அந்த ஊமைப் பைத்தியம் ஓயாமல் எங்களைப் பின் தொடர்ந்து வந்து தொல்லை கொடுத்தது. அதனால் தான் முடியவில்லை......"

"வாணர் குலத்து வீரன் கடலில் மூழ்கி இறந்து விட்டதாகச் சொன்னீர்கள். அவனும் தப்பிப் பிழைத்து வந்து விட்டான்......"

"பள்ளிப்படைக் காட்டில் அவனை வேலை தீர்க்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. தாங்கள் தடுத்து விட்டீர்கள்."

"அதற்கு முக்கிய காரணம் இருப்பதாகச் சொன்னேன்......"

"அது என்ன முக்கிய காரணமோ தெரியாது. அவன் இங்கே வந்து ஆதித்த கரிகாலனை இரும்புக் கவசம்போல் பாது காத்து வருகிறான்."

"அதைப்பற்றி நீ சிறிதும் கவலைப் பட வேண்டாம்."

"கவலைப்பட்டே தீர வேண்டி யிருக்கிறது. இன்று இல்லா விட்டால் என்றைக்கும் இல்லை. தேவி! என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்? நாங்கள் என்ன செய்ய வேண்டும்?"

"இந்தச் சமயத்தில் நீங்கள் ஒருவரும் இங்கு வராதிருந்தாலே எனக்குப் பெரிய உதவியா யிருக்கும்......"

"அது ஒருநாளும் முடியாத காரியம்."

"என்னிடம் உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை......"

"நம்பிக்கை இருப்பதினால்தான் வந்திருக்கிறோம். சபதம் முடிந்த பிறகு தங்களைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறோம். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டால் அதற்கும் தயாரா யிருப்போம். எந்த நிமிஷமும் தாங்கள் எங்களை உதவிக்கு அழைக்கலாம்."

"நான் போட்டிருக்கும் திட்டத்தில் தடங்கல் எதுவும் ஏற்படாது. சபதம் முடிந்த பிறகு நான் உயிரோடிருக்கவும் விரும்பவில்லை."

"கூடவே கூடாது! தாங்கள் எங்களுடன் வந்தே தீர வேண்டும். இல்லையென்றால்......"

"மந்திரவாதி! சபதம் முடிந்த பிறகு ஒரு நிமிஷமும் நான் பெரிய பழுவேட்டரையர் வீட்டில் இருக்க மாட்டேன்..."

"அப்படியானால் நீங்கள் எங்களுடன் வந்து விடுங்கள்!"

"என்னை எப்படி அழைத்துக் கொண்டு போவீர்கள்?"

"இந்தச் சுரங்கப் பாதையின் முடிவில் ஐயனார் கோவில் இருக்கிறது. அதன் அருகில் உள்ள காட்டில் பழுவூர் ராணியின் பல்லக்கைத் தயாராக வைத்திருக்கிறோம். இடும்பன்காரி பல்லக்கைச் செப்பனிடுவதற்கென்று முன்னமே வெளியிலே கொண்டு வந்து விட்டான். வீர பாண்டியனின் தலையைக் கொய்தவனைப் பழிவாங்கிய தேவியை நாங்களே பல்லக்கில் வைத்துத் தூக்கிச் செல்

வோம். பொழுது விடிவதற்குள் கொல்லி மலைக்குப் போய் விடுவோம்."

"நீங்கள் எத்தனை பேர் இந்த இடத்தில் இருக்கிறீர்கள்?"

"இங்கே நாலு பேர் இருக்கிறோம்!" என்று கூறி விட்டு ரவிதாஸன் மெதுவாகக் கையைத் தட்டினான்.

அந்த மண்டபத்தில் இருந்த பயங்கரமான செத்த மிருகங்களுக்குப் பின்னால் ஒளிந்திருந்தவர்கள் சிறிது வெளிப்பட்டு முகத்தைக் காட்டினார்கள்.

"பரமேசுவரன் எங்கே?" என்று நந்தினி கேட்டாள்.

"அவனை வெளியில் நிறுத்தியிருக்கிறேன். ஐயனார் கோவிலில் காளாமுகன் ஒருவன் நிஷ்டை செய்து கொண்டிருந்தான். அவனை அங்கிருந்து போகச் சொல்வது பெரிய தொல்லையாய்ப் போய்விட்டது. மறுபடியும் அவன் அங்கு வந்து விடாமல் பார்த்துக் கொள்ளும்படி தேவராளனைக் கோவில் வாசலில் நிறுத்தி விட்டு வந்திருக்கிறேன்..."

"காளாமுகனைப் பற்றி நமக்கு என்ன கவலை? மந்திரவாதி! பெரிய பழுவேட்டரையரைப் பற்றிய செய்தி தெரியுமா?" என்று நந்தினி கேட்டாள்.

ரவிதாஸன் சிறிது திடுக்கிட்டு, "என்ன செய்தி?" என்றான்.

"அவர் தஞ்சாவூருக்குப் பிரயாணப்பட்டுப் போனார் அல்லவா? வழியில் கொள்ளிடத்தைப் படகில் கடக்கும் போது புயல் அடித்துப் படகு கவிழ்ந்து விட்டதாம். பழுவேட்டரையர் கரையேறவில்லை யென்றும், தண்ணீரில் முழுகிப் போய் விட்டதாகவும் சம்புவரையனுக்கு இன்று சாயங்காலம் செய்தி வந்திருக்கிறதாம்!"

"தெய்வமே? அவர் கதி அப்படியா ஆயிற்று? இத்தனை நேரம் தாங்கள் இந்த முக்கிய விவரத்தைப் பற்றிச் சொல்லவில்லையே?"

"அதை நான் நம்பவில்லை, மந்திரவாதி! பழுவேட்டரையர் கொள்ளிடத்தில் முழுகி இறந்திருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை."

"எனக்கும் அந்தச் செய்தியில் நம்பிக்கை இல்லை, ராணி!"

"அவர் கொள்ளிடத்தின் இக்கரைக்கு நீந்தி வந்திருந்தால் என்ன செய்கிறது? ஒருவேளை இன்றிரவு இங்கு வந்து விட்டால்?......இதைப் பற்றித்தான் சிறிது கவலைப்படுகிறேன்......"

"ராணி! அதைப் பற்றித் தங்களுக்குக் கவலை வேண்டாம். இப்போதுதான் எனக்கும் நினைவு வருகிறது. கொள்ளிடத்துக்கு அக்கரையில் தஞ்சாவூர்ச் சாலையில் ஆஜானுபாகுவான மனிதர் ஒருவரை நேற்றிரவு பார்த்தேன். ஆடை ஆபரணம் ஒன்றும் அவர் அணிந்திருக்கவில்லை. இருட்டாகவும் இருந்தபடியால் அடையாளம் தெரியவில்லை. இப்போது யோசித்தால், அந்த வழிப்போக்கர் ஒருவேளை பெரிய பழுவேட்டரையராகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது!"

"அப்படியானால், நிச்சயமாக இன்றிரவு அவர் இங்கே வந்து விட மாட்டார் அல்லவா?"

"மாட்டவே மாட்டார்! அதைப் பற்றித் தாங்கள் தைரியமாக இருக்கலாம். இப்பொழுது எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?"

"மந்திரவாதி! நீங்கள் இங்கேயே பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். என்னுடைய அறையில் என்ன நடப்பதாகத் தோன்றினாலும், எத்தனை பேருடைய பேச்சுக் குரல் கேட்டாலும் அவசரப்பட்டு உள்ளே வரவேண்டாம். வந்தால் காரியம் கெட்டுப் போகும். நான் குரல் கொடுத்த பிறகு நீங்கள் வந்து சேருங்கள்!"

"ராணி! தாங்கள் எப்படிக் குரல் கொடுப்பீர்கள்?"

"மந்திரவாதி! நான் கலகலவென்று சிரித்துப் பல வருஷம் ஆயிற்று என்று தெரியும் அல்லவா? நான் சிரித்து நீ கேட்டே யிருக்க மாட்டாய்!"

"தேவி! ஒரே ஒரு சமயம் அந்தத் துஷ்ட வாலிபன் வந்தியத்தேவனுடன் பேசிக்கொண்டிருந்த போது நீங்கள் சிரிக்கக் கேட்டேன்......"

"ஆகா! அதைக்கூட ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறாயா? நல்லது! இன்றைக்கு நான் கல கலவென்று உரத்துச் சிரிக்கும் சத்தம் கேட்டால் நீங்கள் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வாருங்கள். காரியம் முடிந்து விட்டதற்கு அது அடையாளம். இப்போதும் வந்தியத் தேவனைப் பார்த்தே நான் சிரித்துக் கொண்டிருந்தாலும் இருப்பேன். அதைப் பற்றி நீங்கள் ஆச்சரியப்பட வேண்டாம்..."

"தேவி! தங்களுடைய உத்தேசம் என்னவென்பது ஒருவாறு இப்போது எனக்குத் துலங்குகிறது......"

"கொஞ்சம் பொறுத்திருந்தால், எல்லாம் துலாம்பரமாகிவிடும். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டு விட்டால், அப்போது என் அழுகைக் குரல் கேட்கும். உடனே வந்து சேருங்கள்......"

"அப்படியே செய்வோம், ராணி! ஆனால் தங்கள் அழுகைக் குரலைக் கேட்க நான் விரும்பவில்லை. சிரிப்புக் குரலைக் கேட்கத்தான் விரும்புகிறேன்" என்றான் மந்திரவாதி ரவிதாஸன்.

## அத்தியாயம் 33

# "ஐயோ! பிசாசு!"

அதே சமயத்தில் வந்தியத்தேவன் மிக்க மனச் சோர்வுடன் கடம்பூர் மாளிகையைச் சேர்ந்த நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அந்த நந்தவனம் மாளிகையில் வெளி மதிள் சுவர் ஓரமாக அமைந்திருந்தது. இரவில் மலரும் புஷ்பங்கள் அப்போதுதான் மடலவிழ்ந்து கொண்டிருந்தன. பன்னீர், பாரிஜாதம், மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் நறுமணத்தை ஐப்பசிமாதத்தின் வாடைக் காற்று அவன் பக்கமாகக் கொண்டு வந்து வீசியது. "ஆகா! இந்த நேரத்தில் பழையாறை அரண்மனை நந்தவனத்தில் நாம் இருக்கக் கூடாதா? அப்படியிருக்கும்போது திடீரென்று குந்தவை தேவியின் பாதச் சிலம்பு ஒலிக்கக் கூடாதா?" என்று அவன் மனம் எண்ணமிட்டது. "இங்கே வந்து இந்தக் கடம்பூர் அரண்மனையில் அடைபட்டுக் கிடக்கிறோமே? வெறி பிடித்த இளவரசரிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறோமே?" என்று நினைத்தான். ஆதித்த கரிகாலர் என்றுமில்லாத வண்ணம் அன்று மாலை அவன் மீது சீறி எரிந்து விழுந்ததும் "இனி இன்றைக்கு என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்தபிறகு உன்னைப் பற்றி என் முடிவைத் தெரிவிக்கிறேன்" என்று கூறியதும் அவன் மனத்தைப் புண்படுத்தி யிருந்தன. ஒரு நாளுமில்லாத விதமாக அவர் இன்று கோபித்துக் கொண்டு விட்டார். பாவம்! அவர் மீது குறைப்பட்டு என்ன பயன்? அவர் உள்ளம் அவ்விதமாக குழம்பிவிட்டிருக்கிறது. அவர் நிலையை நினைத்துப் பார்க்கும் போது வந்தியத்தேவனுக்கு அவர்மீது பரிதாபமே உண்டாயிற்று.

* * *

அன்றெல்லாம் ஆதித்த கரிகாலரின் உன்மத்தம் உச்ச நிலையை அடைந்திருந்தது. உற்சாகமும் சோர்வும் கோபமும் குதூகலமும் சிநேகப் பான்மையும் கொடூரப் பகைமையும் மாறி மாறி அவரைப் பிடித்து ஆட்டி வைத்தன. அவரும் தம்மைச் சுற்றியிருந்தவர்களை அம்மாதிரி ஆட்டி வைத்துக் கொண்டிருந்தார். அடுத்த நிமிஷம் அவருடைய போக்கு எப்படியிருக்குமோ, என்ன செய்வாரோ என்று அருகிலிருந்தவர்கள் கதி கலங்கிக் கொண்டிருந்தார்கள்.

அன்றைக்குச் சூரியன் உதயமானதிலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகள் அவருடைய உன்மத்தத்தை அதிகமாக்க உதவி செய்து கொண்டிருந்தன.

சம்புவரையர் முதன் முதலாக அவரிடம் வந்து, திருக்கோவலூர் மலையமான் படை திரட்டிக் கொண்டு வருகிற செய்தியைத் தெரிவித்தார். அதைப் பற்றித் தமது ஆட்சேபத்தையும் கண்டனத்தையும் தெரிவித்துக் கொண்டார்.

"மலையமான் தொண்டு கிழவர்; வயது எண்பதுக்கு மேலாகிறது. அவர் வருவதைக் குறித்து உங்களுக்கு என்ன பயம்?" என்றார் இளவரசர்.

"ஐயா! கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்தில் வந்தவர்கள் நாங்கள். பயம் என்றால் இன்னதென்றே அறியாதவர்கள். தாங்கள் இங்கு விஜயம் செய்திருப்பதை முன்னிட்டே தயங்குகிறேன். தாங்கள் மட்டும் அநுமதி கொடுத்தால்......"

"கிழவரோடு போர் புரிவதற்கு உடனே புறப்பட ஆயத்தமாயிருக்கிறீர்கள். அவ்வளவுதானே! சம்புவரையரே! என் பாட்டனைப் படையுடன் புறப்பட்டு வரும்படி நான்தான் செய்தி அனுப்பினேன்!"

"எதற்காக, இளவரசே?"

"நான் இங்கே உங்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன் அல்லவா? இங்கே இருக்கும்போது எனக்கு ஏதாவது நேர்ந்தால் ......"

"கோமகனே! அப்படிப்பட்ட சந்தேகம் அணுவளவும் தங்கள் மனத்தில் இருந்தால், இந்தக் கணமே ......"

"இங்கிருந்து என்னைக் கிளம்பிவிடச் சொல்கிறீர்களாக்கும்!"

"ஐயா! இது தங்களுடைய இராஜ்யம்; இது தங்களுடைய அரண்மனை. இதன் உச்சியில் புலிக் கொடி பறக்கிறது. இங்கிருந்து தங்களைப் போகச் சொல்வதற்கு நான் யார்? தாங்கள் அநுமதி கொடுத்தால் நானும் என் குடும்பத்தாரும் இங்கிருந்து போய்விடுகிறோம். மிலாடுடையார் மலையமானை வரவழைத்து வைத்துக் கொண்டு தாங்கள் நிர்ப்பயமாக இங்கே இருக்கலாம்......"

"ஓகோ! வல்வில் ஓரியின் வம்சத்தில் பிறந்த நீங்கள் பயமறியாதவர்கள் என்றும் விஜயாலய சோழரின் குலத்தில் பிறந்த நான் பயங்கொள்ளி என்றும் சொல்லிக் காட்டுகிறீரா?"

"இளவரசரின் வைர நெஞ்சமும் வீரதீரமும் உலகம் அறிந்தவை. பன்னிரண்டாம் பிராயத்தில் தாங்கள் சேவூர்ப் போர்க்களத்தில் புகுந்து பகைவர்களைச் சின்னாபின்னம் செய்து வீராதி வீரன் என்று பெயர் பெற்றீர்கள். பதினெட்டாம் பிராயத்தில் மறுபடியும் போருக்கு வந்த வீர பாண்டியனைத் தொடர்ந்து துரத்திச் சென்று ஒளிந்திருந்த இடத்தில் அவனைக் கண்டு பிடித்து,அவன் சிரத்தைத் துணித்துக்கொண்டு வந்தீர்கள்..."

இதைக் கேட்ட ஆதித்த கரிகாலன் "தெரியும், ஐயா! தெரியும்! ஓடியவனைத் துரத்திய வீரப்புலி நான் என்றும், செத்துப் போன வீர பாண்டியனுடைய தலையை வெட்டிக் கொண்டு வந்தவனென்றும் நீங்கள் எல்லாரும் என்னைப் பரிகசித்துப் பேசுவது எனக்குத் தெரியும்; அந்தப் பழுவூர் மோகினிப் பேய் அத்தகைய வதந்திகளைக் கிளப்பி விட்டிருக்கிறாள் என்பதும் எனக்குத் தெரியும்!" என்று கூறிவிட்டுப் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

சம்புவரையருக்கு ஏன் இந்த வெறி கொண்ட இளவரசரிடம் பேச்சுக் கொடுத்தோம் என்று ஆகிவிட்டது.

"கோமகனே! நான் எது சொன்னாலும் தவறாகப் போய் விடுகிறது. தங்கள் உசிதம் எப்படியோ அப்படிச் செய்யுங்கள். நான் போய் வருகிறேன்."

"போய் வருவது சரிதான்; ஆனால் இந்தக் கோட்டையை விட்டுப் போகும் எண்ணத்தை மட்டும் விட்டு விடுங்கள். இந்த அரண்மனையில் நான்கு மாதங்களுக்கு முன்னால் நடந்த சதியாலோசனையைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்ளும் வரையில் நானும் இந்த இடத்தை விட்டுப் போகப்போவதில்லை; நீங்கள் போவதற்கும் விடப் போவதில்லை!" என்றார் ஆதித்த கரிகாலர்.

சம்புவரையரின் உதடுகள் துடித்தன. உடம்பு நடுங்கியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பியது.

இந்த நிலையைப் பக்கத்தில் இருந்த பார்த்திபேந்திரன் பார்த்தான்.

"கோமகனே! சோழ குலத்தவர் வீரத்திற்குப் புகழ் பெற்றது போலவே நீதிக்கும் பெயர் பெற்றவர்கள். இந்தப் பெரியவருக்குத் தாங்கள் நீதி செய்யவில்லை. தங்கள் வார்த்தைகளினால் அவருடைய மனத்தைப் புண்படுத்துகிறீர்கள். இங்கு நடந்த சிற்றரசர் கூட்டத்தைப் பற்றிச் சம்புவரையர் முன்னமே தக்க சமாதானம் சொல்லித் தாங்களும் ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் இராஜ்யம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாலும், தஞ்சாவூருக்குப் போகவே மறுப்பதாலும், சிற்றரசர்கள் சோழ ராஜ்யத்தின் நன்மையைக் கருதி அடுத்த பட்டத்துக்கு யார் என்பதைப் பற்றி யோசித்தார்கள். தாங்கள் இராஜ்ய பாரத்தை வகிக்க இசைந்தால், அவர்கள் ஏன் வேறு யோசனை செய்ய வேண்டும்? உலகமெல்லாம் வீரப் புகழ் பரப்பிய ஆதித்த கரிகாலர் இருக்கும்போது, போர்க்களத்தையே பார்த்தறியாத மதுராந்தகத் தேவனைப் பற்றி இவர்கள் கனவிலும் கருதுவார்களா?......"

ஆதித்த கரிகாலர் குறுக்கிட்டு, "ஆமாம், ஆமாம்! நான் உயிரோடிருக்கும்போது இன்னொருவன் சோழ சிங்காதனம் ஏறுவது இயலாத காரியந்தான். அதற்காகத்தான் என்னை வேலை தீர்த்து விடப் பார்க்கிறீர்கள்!" என்று கூறிவிட்டு மறுபடியும் ஹா ஹா ஹா வென்று உரத்துச் சிரித்தார்.

"பார்த்திபேந்திரா! நீயும் இவர்களுடன் சேர்ந்து கொண்டதை நான் அறியவில்லையென்று நினைத்தாய்? கந்தமாறனும் நீயும் அன்று நாம் வேட்டைக்குப் போனபோது என் பின்னாலேயே வேலைக் குறி பார்த்துக் கொண்டு வந்தது எனக்குத் தெரியாது என்று நினைத்தாய்? என் உண்மை நண்பனாகிய இந்த வந்தியத்தேவன் மட்டும் தெய்வாதீனமாக இங்கு வந்து சேர்ந்திராவிட்டால், இதற்குள் என்னை யமனுலகத்துக்கு அனுப்பியிருக்க மாட்டீர்களா?" என்று சொன்னார்.

பார்த்திபேந்திரன் வந்தியத்தேவனைக் கண்ணாலேயே கொன்று விடுகிறவனைப் போல் பார்த்து விட்டு, "ஐயா! இந்தப் பாதகன் ஏதேதோ சொல்லித் தங்கள் மனத்தைக் கெடுத்து விட்டான். தங்களுக்கு நான் மனத்தினாலும் துரோகம் எண்ணியதாக இவன் நிரூபித்து விட்டால், இந்தக் கணமே......" என்றான்.

"அப்பனே! உன் மனத்தில் எண்ணிய துரோகத்தை யார் எப்படி நிரூபிக்க முடியும்? நான் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்! நீயும் கந்தமாறனும் பழுவூர் இளைய ராணியின் பேச்சைக் கேட்டு மயங்கித்தானே என்னை இங்கே அழைத்து வர இவ்வளவு பிரயத்தனம் செய்தீர்கள்? இதை இல்லை யென்று நீ மறுக்க முடியுமா?"

"அதை மறுக்கவில்லை, இளவரசே! மறுக்க வேண்டிய அவசியமும் இல்லை. பழுவூர் ராணி மிக நல்ல நோக்கத்துடனே இந்தக் காரியத்தில் தலையிட்டிருக்கிறார் என்பதை நான் நிச்சயமாய் அறிவேன். தங்களை இங்கு தருவித்துக் கந்தமாறனுடைய சகோதரியைத் தங்களுக்கு மணம் புரிவித்துச் சோழநாட்டில் எவ்வித உட் கலகமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்வதே அவருடைய நோக்கம். தங்களுடைய சிரஸில் சோழகுலத்து மணி மகுடத்தை அணிந்து பார்ப்பதைக் காட்டிலும் எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சி தரக் கூடியது வேறு ஒன்று மில்லை. என்னை யாராவது குறை கூறினாலும் பொறுத்துக் கொள்வேன்; பழுவூர் ராணியைப் பற்றி நிந்தை சொன்னால், அவனை அக்கணமே இந்த வாளுக்கு இரையாக்குவேன்!" என்று பார்த்திபேந்திரன் வந்தியத் தேவனைப் பார்த்துக் கொண்டே கூறி, அதே சமயத்தில் வாளையும் உறையிலிருந்து உருவினான்.

"ஆகா! என் வீர நண்பா! வாளை உறையிலே போட்டுவை! நல்ல சமயம் வரும்போது சொல்கிறேன். அப்போது வெளியில் எடுக்கலாம். வந்தியத்தேவன் பழுவூர் ராணியைப் பற்றி ஒன்றும் குறை கூறவில்லை. அவனும் உங்களைப் போலத்தான் மதிமயங்கி நிற்கிறான். உண்மையில், பழுவூர் இளையராணி என் உடன் பிறந்த சகோதரி என்று சத்தியம் செய்து கொண்டிருக்கிறான். அதைச் சொல்வதற்காகவே ஓடோடியும் வந்தான். உன் பேரில் அவன் வேறு குற்றம் சாட்டுகிறான். என் சகோதரனை நீ ஈழ நாட்டிலிருந்து உன் கப்பலில் அழைத்துக் கொண்டு வந்து வழியில் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டாய் என்று அவன் சொல்கிறானே? அதற்கு உன் பதில் என்ன?" என்றார் ஆதித்த கரிகாலர்.

அந்தச் சமயத்தில், "நான் அதற்குப் பதில் சொல்கிறேன்!" என்று கூறிக் கொண்டே கந்தமாறன் அங்கு வந்தான்.

"கோமகனே! மிகச் சந்தோஷமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். சின்ன இளவரசர் கடலில் மூழ்கிச் சாக வில்லை. பொன்னியின் செல்வர் நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இத்தனை நாளும் மறைந்து இருந்து வந்தாராம். புயல் அடித்துக் கடல் பொங்கி நாகைப்பட்டினம் நகரில் புகுந்தபோது அவர் வெளிப்பட நேர்ந்ததாம். லட்சக் கணக்கான ஜனங்கள் புடை சூழ இப்போது தஞ்சாவூரை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறாராம்!" என்று கந்தமாறன் குதூகலத்துடன் கூறினான்.

இந்தச் செய்தியினால் கரிகாலர் உற்சாகமடைவார் என்று எதிர்பார்த்ததில் அவன் பெரும் ஏமாற்றமடைந்தான். கரிகாலருடைய குரோதம் இப்போது வேறு திசையில் திரும்பியது.

"என்ன? என்ன? அருள்மொழி தஞ்சாவூரை நோக்கிப் போகிறானா? லட்சக்கணக்கான ஜனங்கள் புடை சூழப் போகிறானா? எதற்காக? வல்லவரையா! நீ என்ன சொன்னாய்? இப்போது நடப்பதென்ன? என்னுடைய கருத்தை அறிந்து கொள்ளும் வரையில் அருள்மொழி நாகைப்பட்டினத்திலேயே இருப்பான் என்று சொன்னாய் அல்லவா? இப்போது ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான்?......"

வந்தியத்தேவன் குறுக்கிட்டுப் பேசினான்:—"ஐயா! இளையபிராட்டி அவ்வாறுதான் உறுதியாகக் கூறினார். அதற்குப் பின்னர் என்ன காரணம் நேர்ந்ததோ தெரியவில்லை. நான் வேறு மானால் போய்......"

"ஆகா! நீயும் போய் விடுகிறேன் என்கிறாயே? நல்லது, நல்லது! எல்லாருமே என் விரோதிகள் ஆகிவிட்டீர்கள். உங்கள் சூழ்ச்சி யெல்லாம் எனக்குத் தெரிகிறது. அருள்மொழி ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான் என்று எனக்குத் தெரியும். அது அந்தக் கொடும்பாளூர்ப் பெரிய வேளானின் சூழ்ச்சி. அவனுடைய தம்பி மகளை என் சகோதரன் கழுத்தில் கட்டி அவர்களைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டுமென்பது அக் கிழவனுடைய விருப்பம்.

கொடும்பாளூர் வேளானும் தென்திசைப் படையுடன் தஞ்சையை நோக்கி வருவதாகக் கேள்விப்பட்டேன். என் சகோதரி இளைய பிராட்டியும் இந்தச் சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறாள். ஆமாம்; நீயுங் கூடத்தான் ......"

வந்தியத்தேவன் "இளவரசே! மன்னியுங்கள்! பொன்னியின் செல்வருக்காவது இளைய பிராட்டிக்காவது அத்தகைய எண்ணம் சிறிதும் கிடையாது. இது சத்தியம். நான் வேணுமானால் போய் உண்மையை அறிந்து வருகிறேன்!" என்றான்.

"ஆமாம்; நீயும் போய் அவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து கொள்கிறேன் என்கிறாய்! கந்தமாறா! இவனை உடனே பிடித்து......இந்த அரண்மனையில் சுரங்கச் சிறை ஏதாவது இருந்தால் அதில் அடைத்து விடு!" என்றதும் கந்தமாறன் வெகு குதூகலத்துடன் வந்தியத்தேவனை அணுகினான்.

உடனே கரிகாலர் தமது கட்டளையை மாற்றிக் கொண்டு, "வேண்டாம், வேண்டாம்! சோழர் குலத்தவர்கள் நீதி தவறாதவர்கள். குற்றம் நிச்சயமாகிறவரையில் தண்டிக்கமாட்டார்கள். வல்லவரையா! இனிமேல் இன்று முழுவதும் என் முகத்தில் விழிக்காதே! அதுதான் உனக்குத் தண்டனை! உன்னைத் தஞ்சைக்கு அனுப்புகிறேனா, சிறைக்கு அனுப்புகிறேனா என்பதைப் பற்றி நாளைக்குச் சொல்கிறேன்! போ! போ! இனி ஒரு கணமும் இங்கே நில்லாதே! போய்விடு" என்றார்.

கரிகாலருடைய முகத்தை அப்போது வந்தியத்தேவன் பார்த்தான். அவருடைய கடைக் கண்ணின் சமிக்ஞை "இதெல்லாம் விளையாட்டு!" என்று குறிப்பிடுவதுபோல் தோன்றியது. ஆயினும் உன்மத்தம் கொண்டிருந்த இளவரசர் பக்கத்தில் இல்லாமலிருப்பதே நல்லது என்று ஒரு நொடியில் தீர்மானித்துக் கொண்டு வந்தியத்தேவன், "ஐயா! தங்கள் சித்தம் என் பாக்கியம்!" என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.

**பி**ன்னர் அன்று பிற்பகலில் இளவரசரின் கட்டளையின் பேரில் சம்புவரையரும் பார்த்திபேந்திரனும் திருக்கோவலூர்க் கிழாரை எதிர் கொண்டு அழைத்து வருவதற்காகப் போனார்கள் என்று வல்லவரையன் வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான்.

இளவரசரும் கந்தமாறனும் நெடுநேரம் அந்தரங்கமாக வார்த்தையாடிக் கொண்டிருந்ததையும் அறிந்தான்.

இந்தச் சம்பவங்களெல்லாம் வந்தியத்தேவனுக்கு மிக்க மனச் சோர்வை உண்டாக்கியிருந்தன. மறு நாள் காலையில் இளவரசர் தனக்கு என்ன கட்டளை பிறப்பிப்பார்? தஞ்சாவூருக்குப் போகும்படி பணிப்பாரா? வழியில் பழையாறைக்குப் போகும்படியும் சொல்வாரா? சொன்னால் எவ்வளவு நன்றாயிருக்கும்?... இந்தக் கடம்பூர் மாளிகை வாழ்வு அவனுக்குப் பிடிக்கவே இல்லை. இங்கே யாரும் உற்சாகமாக இருப்பதில்லை. இங்கே உள்ளவர்கள் எல்லாரும் எப்போதும் எதையோ பறி கொடுத்தவர்களைப்போலிருக்கிறார்கள். அஸ்தமித்துவிட்டால் இந்த மாளிகை மனிதர்கள் வாழும் மாளிகையாகவே தோன்றவில்லை. பேய் பிசாசுகள் குடிகொண்டிருக்கும் பாழடைந்த மாளிகையாகத் தோன்றுகிறது. இங்கேயிருந்து எப்போது எப்படிக் கிளம்பப் போகிறோம்?......

இப்படி வந்தியத்தேவன் எண்ணமிட்டபோது ஒரு பெண்ணின் குரல், "ஐயோ! பிசாசு!" என்று அலறியது அவன் காதில் விழுந்தது. (தொடரும்)

**அட்டைப்பட விளக்கம்**

## சுபிட்ச தீபாவளி

**ஆ**று ஆண்டுகளுக்குப் பிறகு இவ்வருஷத்தில் மேற்குக் கடற்கரையோரப் பிரதேசங்களில் நல்ல மழை பெய்திருக்கிறது. மேட்டூர்த் தேக்கத்தில் தண்ணீர் ததும்பி நிற்கிறது. தமிழ் நாட்டில் பல இடங்களிலும் கோடை மழை நன்றாய்ப் பெய்திருக்கிறது. வறட்சிக்குப் பெயர்போன சேலம் ஜில்லாவில் வருஷாந்தர சராசரியைக் காட்டிலும் எட்டு அங்குலம் மழை அதிகமாகப் பெய்திருக்கிறது என்றால், பார்த்துக் கொள்ளுங்கள்.

இதுபோலவே ஐப்பசி - கார்த்திகை மாதத்திலும் பருவமழை சரியாகப் பெய்து விட்டால், தமிழ் நாட்டிற்குச் சுபிட்ச யுகம் தொடங்கி விட்டது என்று உறுதியாகக் கூறலாம்.

நாட்டு நிலைமை எப்படியிருந்தாலும் தமிழ் மக்கள் தீபாவளிப் பண்டிகையைக் குதூகலமாகக் கொண்டாடத் தவறுவதில்லை. சுபிட்ச யுகம் தொடங்கும் இந்த வருஷம் வழக்கத்தைக் காட்டிலும் அதிக உற்சாகத்துடன் தீபாவளி கொண்டாடுவார்கள். சுபிட்ச தீபாவளியின் குதூகலத்தை அதிகப்படுத்துமாறு இவ்வாண்டில் "கல்கி" தீபாவளி மலர் சிறப்பான அம்சங்களுடன் வெளியிடப்படும் என்பதை நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# எவரெஸ்டு சிகரத்தின்மேல் மண்ணெண்ணெய்



எவரெஸ்டு சிகரம் ஏறி வெற்றி பெற்ற கோஷ்டிக்கு தேவையான மண்ணெண்ணெய் சப்ளைக்கு, பர்மா-ஷெல் விசேஷ ஏற்பாடுகள் செய்திருந்தனர். இதற்கு விசேஷ பாக்கிங் அவசியமாக இருந்தது. கோஷ்டியினரிடமுள்ள பிரிமஸ் ஸ்டவ்களின் உபயோகத்திற்காக 124 காலன் மண்ணெண்ணெய் சப்ளை செய்யப்பட்டது. கோஷ்டியின் தலைவர் கர்னல் ஸர். ஜான் ஹண்ட் பர்மா-ஷெல்லுக்கு எழுதிய கடிதம் பின்வருமாறு.

எவரெஸ்டு சிகர மேறும்
பிரிட்டிஷ் கோஷ்டியார்
பிரிட்டிஷ் தூதராலயம்
நேபாளம்.
17—6—1953.

எவரெஸ்டு சிகர மேறும் பிரிட்டிஷ் கோஷ்டியாருக்கு பர்மா-ஷெல் புரிந்துள்ள மகத்தான சேவையை இந்த சந்தர்ப்பத்தில் மகிழ்ச்சியுடன் குறிப்பிட விரும்புகிறேன்.

எமது சமையல் வேலை சாதனங்களுக்கு உயர் ரக மண்ணெண்ணெயும், ஸ்பிரிட்டும் ஏராளமாகத் தேவையாயிருந்தது. 100 காலன்களுக்கு மேற்பட்ட இச்சரக்கை மலைப்பிரதேசத்தில் எடுத்துச் செல்லும்போது கரடு முரடாகக் கையாள வேண்டிய நிர்ப்பந்தத்தை சமாளிக்கும் படியும், நல்ல உயரங்களில் எண்ணெ ஆவியாக மாறிவிடாமலிருக்கும் படியும் விசேஷ பாக்கிங் அவசியமாயிருந்தது.

எரிபொருள் அப்பட்டமான ரகமாயும், பாக்கிங் எமது கடின தேவையைச் சரிவர பூர்த்தி செய்வதாயுமிருந்தன. எண்ணெ டின்களை 26,400 அடி உயரத்திலுள்ள 'ஸவுத்கால்' வரை தூக்கிச் சென்றோம். ஒரு குவார்ட் டின் ஒன்றை 27,900 அடி உயரத்திலிருக்கும் எமது உச்சி முகாமிற்கே (முகாம் 9) எடுத்துச் சென்றோம். எரி பொருளின் தரம் உயர்வாக இருந்ததால் பிரிமஸ் ஸ்டவ் நன்கு எரிந்தது.

(கையொப்பம்) ஜான் ஹண்ட்
தலைவர்.



பர்மா-ஷெல் விற்பனைக் கனுப்பும் மண்ணெண்ணெய் ரகங்கள் பிரசித்தி பெற்ற 'உதயசூரியன்', 'ஹம்ஸம்' 'சக்கர்', 'ராணி' பிராண்டுகளாவன.



**பர்மா-ஷெல்...**

**பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

BSY-741-TAM.



# நல்ல ரஸ்தாக்கள்

## எனில் நல்ல வாழ்க்கை!

நன்கு சீர்திருத்தப்பட்ட ரஸ்தாக்கள் தேசத்தின் ஜீவநாடி போன்றவை. பரந்துகிடக்கும் நமது பாரத தேசத்தில் நீண்ட தூரத்தால் பிரிக்கப்பட்ட நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் இடையே நல்ல ரஸ்தாக்கள் மிக மிக இன்றியமையாதவை. நீண்ட நாள் நிலைத்து ஈடுகொடுக்கும் ஏ. ஸி. ஸி. ஸிமெண்டினால் கட்டப்பட்ட ரஸ்தாக்கள் இந்தியாவின் இணைப்பு சங்கிலிபோல் தேச முன்னேற்றத்தின் எல்லாத் துறையிலும் மாபெரும் தொண்டு புரிகின்றன.

**தி அஸோஸியேடட் ஸிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி ஸிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

SISTA'S CHI 104-A TAMIL

# பெற்ற தெய்வம்

சரஸன்

"ஸரஸா! உனக்கு இத்தனை பிடிவாதம் உதவாது" என்றார் என் கணவர்.

ஆம்! நான் பிடிவாதம் பிடிக்கத்தான் செய்தேன். நான் எதற்காக என் பிறந்தகம் செல்ல வேண்டும்! என் அருமைக் கணவரை அவமதித்த என் தந்தையின் முகத்திலே எனக்கு விழிக்கப் பிரியமில்லாமலேதான் நான் அங்கு போக மறுத்தேன். பெற்ற தந்தையானால் என்ன, தாயானால் தான் என்ன! ஓர வஞ்சனையுடன் நடத்தினால் எவன் பொறுப்பான், சொல்லுங்கள்! விஷயத்தைச் சற்று விளக்கமாகவே கூறி விடுகிறேன். புதிர் போடவில்லை.

சென்ற வருஷம் என் தங்கையின் கல்யாணத்தின் போது நடந்த விஷயம். நானும் என் கணவரும் குழந்தைகளுடன் கல்யாணத்துக்குச் சென்றிருந்தோம். என் தமக்கையும் தன் குடும்பத்துடன் வந்திருந்தாள். மாப்பிள்ளைகள் என்ற முறைப்படி என் தமக்கையின் கணவருக்கும் என் கணவருக்கும் வேஷ்டி அங்கவஸ்திரம் மரியாதை செய்தார் என் தந்தை. இரண்டு ஜோடிகளையும் நான் பார்வையிட்டேன். 'என் கணவருக்கு வாங்கியிருந்த வேஷ்டி அங்கவஸ்திரத்தையும், என் அத்திம்பேருக்கு எடுத்திருந்த வேஷ்டி அங்கவஸ்திரத்தையும் பார்த்த எனக்கு மனத்தை என்னவோ செய்தது. என் கணவர் ஏழை என்றாலும் அவர் மாப்பிள்ளைதானே! மரியாதை செய்யும் விஷயத்தில் ஏன் இந்தத் தாரதம்யம்! ஒரு கண்ணில் வெண்ணெயும் மறு கண்ணில் சுண்ணாம்புமா! என் கணவர் பொறுத் தன்மை வாய்ந்தவர்தான். இதை யெல்லாம் பாராட்டக் கூடியவர் அல்ல. கேவலம் விலை மதிப்பைக் கொண்டு எதையும் போற்றியோ தூற்றியோ சொல்பவரல்ல. எனினும், என்னால் என் தந்தையின் ஓரவஞ்சனைச் செயலை எண்ணி, மனம் புழுங்காமல் இருக்க முடியவில்லை.



'என்ன தாரதம்யம் இது! என் கணவர் சொற்ப வருவாய் உள்ளவர். தவிர, ஓர் ஏழைப் பரம்பரையில் தோன்றியவர். அத்திம்பேர் பரம்பரைப் பணக்காரர். பெரிய உத்தியோகம். அதனால் தான் நம் தந்தை இம்மாதிரி வித்தியாசம் காட்டியிருக்கிறார். ஒரே பந்தலில் இரு மாப்பிள்ளைகளுக்கும் இருவித ஏற்றத் தாழ்வான உபசாரமா! வேண்டாம். என் கணவருக்கு இந்த வேஷ்டியும் அங்கவஸ்திரமும் வேண்டாம் என்று தந்தையிடம் கூறிவிட வேண்டும்' என்று தீர்மானித்தேன்.

என் தீர்மானத்தை என் கணவரிடம் கூறிய போது, "ஸரஸா! ஏன் இந்த ரகளை! அற்ப விஷயங்களுக்காக இம்மாதிரி ஏன் நடந்து கொள்கிறாய்!" என்று கேட்டார்.

"இது அற்ப விஷயமாய் உங்களுக்குத் தோன்றலாம். நான் அம்மாதிரி நினைக்க முடியாது. அவ



ஜூலை மாதம் 12உ செம்பாக்கத்தில் எடமணல் மிராசுதார் ஸ்ரீமான் எஸ். ராமநாதய்யர் அவர்களுடைய புதல்வன் சிரஞ்சீவி ஆர். வெங்கட்ராமன் பி. எஸ். ஸி. க்கும் காஞ்சி சென்ற குமாரசெட்டி கே. ஆர். கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுடைய புதல்வி சௌபாக்கியவதி இந்திராவுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தது. வாழ்க, மணமக்கள்.

மதிப்பை என்னால் தாங்க முடியாது. உடனே கிளம்புங்கள். நான் இனி இந்த வீட்டில் ஒரு நிமிஷமும் தங்க மாட்டேன்" என்று மூட்டை கட்டிக்கொண்டு கிளம்பிவிட்டேன். என் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு வேறு வழியின்றி அவரும் என்னுடன் வேண்டா வெறுப்பாகக் கிளம்பினார்.

என் தந்தை எவ்வளவோ மன்றாடினார். விஷயத்தைப் பிறகு விளக்கமாய்க் கூறுவதாய்ச் சொல்லிக் கெஞ்சினார்.

"எனக்குத் தெரியும். இதற்கு விளக்கம் வேறு தேவையா! ஒரே விளக்கம்தான். என் கணவர் ஏழை. உங்கள் பெரிய மாப்பிள்ளை பெரும் பணக்காரர். அவ்வளவுதானே!" என்று படபடப்புடன் பேசிவிட்டு வண்டியில் ஏறினேன்.

வழியில் என் கணவர் என் செயலை நயமாய்க் கண்டிக்கும் முறையில் பேசினார். "உங்களுக்குத் தாழ்ந்து தாழ்ந்து நடந்து பழக்கமாகி விட்டது. என்னால் அப்படி முடியாது. தன் வயிற்றில் பிறந்த குழந்தைகளைச் சமமாய்ப் பாவிக்க வகையில்லாத வரையில் என் தந்தை என்று அவரைக் குறிப்பிடவே என் நா கூசுகிறது" என்றேன். என் படபடப்பு சிறிதும் அடங்கவில்லை.

கல்யாணத்தின் போது நான் இம்மாதிரி திடுதிப்பென்று கிளம்பியது குறித்து ஊரே கூடிப் பேசியது என்று கேள்விப்பட்டேன். பலர் என் தந்தையின் செய்கை தவறு என்று பேசிக்கொண்டதையும் கேள்விப்பட்டுக்கூட என் ஆத்திரம் சிறிதும் தணியவில்லை.

அதன் பின்பு, என்னை அழைத்துப் பல கடிதங்கள் வந்தன, என் பிறந்தகத்திலிருந்து. ஒன்றுக்காவது நான் பதில் எழுதவில்லை. ஒரு கடிதத்தில் என் தந்தை, நடந்ததை மறந்து விடும்படியும், என் தாயாரை அனுப்பி வைப்பதாயும், அவளுடன் புறப்பட்டு வந்து சில தினங்கள் தங்கும்படியும் எழுதினார். அதற்குப் பதில் வெகு சூடாகவே எழுதினேன். "என்னை யாரும் வந்து பார்க்க வேண்டாம். நானும் எங்கும் வரத் தயாராயில்லை. சரஸா என்று ஒரு பெண் இருப்பதை மறந்து விடலாம்." இவ்விதம் எழுதிய என் கடிதத்தைக் கண்ட என் கணவர் கதறினார்.

"அசடே! இம்மாதிரியா எழுதுவது! பிரியமில்லையெனில், மொட்டையாக 'வரச் சௌகர்யப்படவில்லை!' என்று ஒரு வரி எழுதிவிடு. இம்மாதிரி எழுதாதே!" என்று கூறிக் கடிதத்தை வாங்கிக் கிழித்துப் போட்டார். எனக்கென்னவோ அவர் கடிதத்தைக் கிழித்துப் போட்டது மிகுந்த மன வருத்தத்தைத்தான் அளித்தது.

காலம் கனவேகமாகச் சென்றது. என் பெண் கிடுகிடுவென்று வளர்ந்து பெரியவளாகி விட்டாள். அவளுக்குக் கல்யாணம் செய்ய வேண்டுமே என்ற கவலை என்னைப் பெரிதும் பிடித்துக் கொண்டிருந்தது. பல இடங்களில் அவளுக்கு வரன் தேடினோம். ஆனால் முயற்சி பலனளித்தால் தானே! எல்லோரும் இரண்டாயிரம், மூவாயிரம் வரதட்சணை தந்தால் கல்யாணம் புரிந்து கொள்வதாகக் கூறினர். என் தந்தையின் ஓர வஞ்சனையோடு என் பெண்ணின் கல்யாண விஷயமும் என்மனத்தைப் பலமாக அரிக்கத் தொடங்கியது.

இந்த நிலையில்தான், அன்று என் தமக்கையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

"அன்புள்ள சரஸா!

என் பையனுக்கு உபநயனம் நடக்க ஏற்பாடாகி யிருக்கிறது. அப்பா, தன் வீட்டிலேயே நடத்த விரும்புகிறார். என் கணவரும் சம்மதித்து விட்டார். பழைய சம்பவத்தை மறந்து எனக்காகவேனும் அவசியம் நீ வர வேண்டும், உன் குடும்பத்துடன். உன் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். —காமு"

மறுபடியும் என் தந்தையின் முகத்தில் விழிக்க நேரிடும் என்று கருதிய என் கணவருடைய வற்புறுத்தலையும் மீறி மறுதளித்தேன். அதற்காகத் தான் என்னை அவர் மிகவும் கோபத்துடன் பிடிவாதக்காரி என்று கூறினார்.

ஒரு வாரம் சென்றது. அன்று என் கணவர் ஆபீஸிலிருந்து திரும்பியதும், சட்டையைக் களையும்போது, அவருடைய சட்டையிலிருந்து ஒரு கவர் 'தொப்'பென்று கீழே விழுந்தது. எங்கே நான் பார்த்து விடுவேனோ என்று பயந்துதான் போலும், அவசரமாய் அதை எடுத்து மறைத்தார். கல்லவேளை! நான் அதைப் பார்த்துவிட்டேன் என்பதை அவர் அறியவில்லை. கை கால் களைக் கழுவக் கொல்லைப்புறம் சென்றதும், நான் உள்ளே சென்று அந்தக் கவரை எடுத்து, என் பெட்டிக்குள் வைத்துவிட்டேன், சாவதானமாய்ப் படிக்கலாம் என்று.

என் கணவர் அன்றிரவு ஏதோ காரியமாக அவசரமாய் வெளியூர் செல்லவேண்டும் என்று கூறிவிட்டுச் சென்றார். அவர் புறப்பட்டுச் சென்ற பின்பு, நான் அக்கடிதத்தை எடுத்துப் படித்துப் பார்த்தேன். கடிதம் என் தந்தையிடமிருந்து வந்ததுதான் என்று அறிந்தபோது அதிக ஆத்திரமும் பரபரப்பும் அடைந்தேன்.

"மாப்பிள்ளைக்கு ஆசீர்வாதம்!

என் துரதிர்ஷ்டம் என் வயிற்றில் பிறந்த பெண் என்னை எதிரி போல் பாவிக்கும் படி செய்து விட்டது. அவளுடைய அறியாமையை நினைத்து என்னால் துக்கப்படாமலிருக்க முடியவில்லை. தாங்கள் மட்டுமாவது உடனே புறப்பட்டு வரவும். சில விஷயங்கள் நேரில் பேச வேண்டும். — ஜகந்நாதன்."

இப்போது விஷயம் எனக்குப் புலனாகிவிட்டது. என் கணவர் என் தந்தையைக் காணத்தான் சென்றிருக்கிறார். இதை என்னிடம் கூறினால் நான் தடுத்து விடுவேன் என்று அஞ்சியே என்னிடம் விஷயத்தைக் கூறாமல் சென்றிருக்கிறார். இதை எண்ணியபோது, என் கணவர்

# வயிற்றுக்கோளாறு தினம் உங்கள் சந்தோஷத்தைக் கெடுக்க விடாதீர்கள்!



உங்களுக்கு அஜீர்ணமோ, நெஞ்செரிச்சலோ அல்லது பித்தமயக்கமோ ஏதாவது ஏற்பட்டால், ஒரு கிளாஸ் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள்—கட்டாயம் நிவர்த்தி பெறுவீர்கள். ஈனோஸ் புளிப்பை அகற்றும் குணமுள்ளதாகையால் அது வயிற்றிலுள்ள 'கன உணர்ச்சியை' சீக்கிரம் நீக்கி, நீங்கள் சந்துஷ்டியும் சுருசுருப்பும் பெற உதவுகிறது. ஈனோஸ் பித்தப்பை மந்தத்தைத் தடுத்து, மலக்கழிவை ஒழுங்குபடுத்துகிறது. ஈனோஸ் மூலம் சந்தோஷமாக வாழுங்கள்

# ஈனோஸ்
# 'ப்ரூட் ஸால்ட்'

**உங்களை தெம்பாகவும் சுருசுருப்பாகவும் வைத்திருக்கிறது**




புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

ENO. 8163

பேரிலும் எனக்குக் கோபம் வந்தது. கொஞ்சமும் தன்மானமில்லாதவராய் இருக்கிறாரே என்று. ஒரே கணம் யோசித்தேன். ஏதோ முக்கிய விஷயம் பேச வேண்டும் என்று என் தந்தை எழுதி யிருக்கிறாரே, கடிதத்தில்! அது என்னவா யிருக்கும்! என் கணவர் எப்படியும் என்னிடம் வந்து விஷயத்தைச் சொல்லக்கூடும் என்றாலும், என்னால் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை.

மறுநாள் காலை. நான் வாசலுக்கு நீர் தெளிக்கப் போனபொழுது வாசலில் ஒரு வண்டி நின்றது. அதிலிருந்து முதலில் என் கணவர் இறங்கினார். அடுத்து, என் தந்தை இறங்கினார். எனக்கு வியப்பு ஒருபுறம்; ஆத்திரம் ஒருபுறம்.

“அப்பா! வாருங்கள்!” என்று சம்பிரதாயத்திற்குக்கூடச் சொல்ல வில்லை. சட்டென்று உள்ளே திரும்பி விட்டேன். உள்ளே நுழைந்த என் கணவரும் என் தந்தையும் உடைகளைக் களைந்துவிட்டு, அமர்ந்தார்கள். என் பெண் விமலாவிடம் அவர்கள் இருவருக்கும் காப்பியைக் கொடுத்தனுப்பி [illegible].

“சரஸுவுக்கு என்மீது உள்ள கோபம் இன்னும் தணியவில்லை போலிருக்கிறது. விமலாவின் கல்யாணத்துடனாவது கோபம் தணிகிறதா பார்ப்போம்!” என்று என் தந்தை கூறியது என் காதில் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் எங்கோ தந்தை வெளியே போய் விட்டார். நானும் பேசவில்லை, அவரும் பேசவில்லை.

“சரஸு!” என்று உரத்த குரலில் என் கணவர் என்னை அழைத்தார்.



சென்னை டி. ஐ. சைக்கிள் கம்பெனி

கடுமையான முகத்துடன் நின்று கொண்டிருந்த அவர் முன் போய் நின்றேன்.

“சரஸு! ஏன் இந்தக் கடுகடுப்பு! உன் தந்தையை வரவேற்பது இம்மாதிரிதானா! அவருடைய அந்தரங்கத்தைப் புரிந்து கொள்ளாமல் வீணில் அவர்மீது பழியைச் சுமத்தினாய், ஓர வஞ்சனை செய்தார் என்று கற்பனை செய்து கொண்டு. அவரை நிந்தித்து விட்டாய். நீ நம்மைப் பற்றி எப்பொழுதும் குறைவாகவே நினைத்துக் கொண்டு மனசில் சதா வேதனைப் படுகிறாய். அந்த வேதனை காரணமாக, அவர் எது செய்தாலும் உனக்குத் தப்பாகப் படுகிறது. பல வருஷங்களாகவே நீ இந்தமாதிரி அபிப்பிராயத்தை மனசில் வேருன்ற விட்டு விட்டாய். அவர் உன் பெற்ற தந்தை மட்டுமல்ல. பெற்ற தெய்வம் கூட. விஷயத்தைக் கேள். அவர் என்னை வரச் சொல்லி எழுதினதின் பேரில் அங்கே போயிருந்தேன் நேற்று. உன்னிடம் பிறகு சொல்லிக் கொள்ளலாம் என்றுதான் நேற்றுக் கூறவில்லை. அங்கு போனதும் விவரமாய் எல்லாவற்றையும் [illegible] கூறினார். அவர் சொன்னதை அப்படி[illegible]கிறேன் கேள்: ‘மாப்பிள்ளை! நான் என் பெண்ணுக்கு வஞ்சனை செய்வேனா! பார்க்கப்போனால், மற்றப் பெண்களைவிடச் சரஸுவின் பேரில்தான் நான் அதிகப் பிரியம் வைத்திருக்கிறேன். தன்னைப் பற்றிய சிறுமை மனப்பான்மை சரசுவின் கண்களை மறைத்து விட்டது. நான் எடுத்த துணிமணிகளில் சற்றுக்கூட ஏற்றத் தாழ்வு இல்லை. ஆனால் கால வித்தியாசம் அவள் கண்களுக்கு அப்படிப் பட்டு விட்டது. அது போகட்டும், அதற்காக நான் என் பெண்ணை மறந்துவிட முடியுமா! விட்டுத்தான் கொடுக்க முடியுமா! உங்கள் பெண்ணும் என் பேத்தியுமான விமலாவுக்குக் கல்யாணம் செய்தாக வேண்டும். குடும்பச் செலவுக்கே உங்கள் வருமானம் காணாதபோது, கலியாணத்திற்கு எப்படிச் சேமிக்க முடியும் உங்களால்! எனவே யாருக்கும் தெரியாமல் விமலாவின் கல்யாணத்திற்கென்று கொஞ்சம் பணம் சேமித்து வைத்திருக்கிறேன். மாப்பிள்ளையும் பார்த்தாகி விட்டது. உங்களுடைய சம்மதந்தான் வேண்டும்' என்று அவர் கூறினார்.”

அதைக் கேட்டு நான் பேசச் சக்தியற்று, திகைத்துப் போய் நின்றேன். என் கணவர் மேலும் தொடர்ந்து “விமலாவுக்கு வரப் போகும் மாப்பிள்ளையை நான் பார்த்து விட்டேன். எனக்கும் பிடித்து விட்டது. உன் தந்தையே கல்யாணச் செலவை ஏற்றுக் கொள்ளப் போகிறாராம். முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி. இத்தகைய உத்தமரை அவமதித்து விட்டாயே!” என்றார் என் கணவர்.

கணவர் கூறியதைக் கேட்டதும் ‘தந்தையைப்

# "விஜய"த்தின் உதயம்

வீர முரசு கொட்டிக் கொண்டு, வெற்றி முழக்கம் செய்து கொண்டு, துவேஷப் பிரசாரப் பேய்களை விரட்டி அடித்துக் கொண்டு, தேசத்தைப் பாழாக்கும் நாசகார சக்திகளை ஓட ஓடத் துரத்திக் கொண்டு, "விஜய" என்னும் புதிய வாரப் பத்திரிகை உதயமாகி யிருக்கிறது. இதன் ஆசிரியர் திரு எஸ்.என். சோமயாஜுலு எம். எல். ஏ., அவர்கள். காலில் நகம் முளைத்த நாளாக நாட்டுவிடுதலைக்கு உழைத்துப் பாடு பட்டவர். தியாகத் தீயில் எத்தனையோ தடவைகள் குதித்து வெளி வந்தவர். இவருடைய சொல்லின் ஆற்றலைத் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் நேயர்கள் கேட்டு வியந்திருப்பார்கள். பிரசங்க சக்தியைப் போலவே எழுதும் ஆற்றலும் படைத்தவர் ஸ்ரீ சோமயாஜுலு என்பதை "விஜய" என்னும் பத்திரிகையின் ஆரம்ப இரண்டு இதழ்கள் எடுத்துக் காட்டுகின்றன.



திரு எஸ். என். சோமயாஜுலு

அராஜகக் கட்சிகளின் அபத்தப் பிரசாரங்களையும், வகுப்புவாதப் பேய்களின் பொய் புனை சுருட்டுகளையும் சக்கைப் போடு போட்டு வன்மையாகத் தாக்கும் கட்டுரைகள் "விஜய"த்தின் பெரும்பாலான பக்கங்களில் நிரம்பி யிருக்கின்றன.

புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை ஆதரித்து அறிவாராய்ச்சிக்கு உகந்த அருமையான கட்டுரை ஒன்றைப் பேராசிரியர் ஸ்ரீ ஏ. சீனிவாச ராகவன் இரு பகுதிகளாக எழுதி யிருக்கிறார்.

மற்றப் பக்கங்களில் வெளியாகி யிருக்கும் அரசியல் கட்டுரைகளில் தீப்பொறி பறக்கிறது. ஈர வாழை மட்டைக்கு அருகில் படித்துக் காட்டினால் அதுகூடத் தீப்பிடித்து எரியத் தொடங்கினாலும் தொடங்கும். குத்தூசிக்குப் பதில் சம்மட்டி அடி; குல்மாலுக்குப் பதில் கோடாலியின் போடு. சில ஆணித்தரமான தலைப்புகளைப் பாருங்கள்: "தீர்க்க வைத்துக் கட வேண்டுமாம்!" "எரிமலை மீது நின்று கூற வேண்டுமா!" "பீரங்கி வாயில் நின்று சொல்ல வேண்டுமா!" 'கம்யூனிஸ்ட் தோழனே! கதையைக் கேள்!"

இத்தகைய வன்மையான தமிழ் நடையை "விஜய"ப் பத்திரிகை கையாண்ட போதிலும் எதிர்க் கட்சிக்காரர்கள் கையாளும் ஆபாச வசைத் தமிழுக்குச் சிறிதும் இடம் தர வில்லை யென்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம். "விஜய" நீடூழி வாழ்ந்து தெய்வத் தமிழகத்துக்கு அவ்வப்போது அவசியமான தொண்டுகளை இயற்றி வர வேண்டுமென்று விரும்புகிறோம். எந்தக் காரணத்தினாலாவது அரசியலில் உற்சாகம் குன்றி யிருப்பவர்கள் உடனே "விஜய"த்துக்குச் சந்தா அனுப்பிப் பெற்றுப் படிக்குமாறு சிபார்சு செய்கிறோம்.

அதில் இருக்கும் சக்தி வாய்ந்த தமிழைப் படிக்கும் போது அமுதசஞ்சீவி மருந்து அருந்தியவர்களைப் போல் புதிய பலமும் உற்சாகமும் அடைவார்கள் என்று உறுதி கூறுகிறோம்.

தமிழ் நாட்டின் சிறந்த கதை ஆசிரியர் புனைந்த தொடர் கதை ஒன்று "விஜய"த்தின் வருகிற இதழ்களில் வெளியாகும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், தொடர் கதைப் பிரியர்கள் உடனேயே "விஜய"த்தின் சந்தாதாரராகச் சேர்ந்து விடுவது நலம். வருஷ சந்தா: ரூ. 6—0—0; தனிப் பிரதி அணா 2; விலாசம்: ஆசிரியர், "விஜய", திருநெல்வேலி டவுன்.

# பரீட்சை முடிந்தது!

அனாஸ்

சிவராமன் அந்த பாங்கியில் வேலைக்கு வந்து மூன்று வருஷம் ஆகியிருக்கும். வாடிக்கைக்காரர்களின் அபிமானத்திற்கும், சக சிப்பந்திகளின் திருப்திக்கும், வந்த அன்றே அவன் பாத்திரமாகி விட்டான். ஆனாலும் மானேஜர் மார்த்தாண்டம்தான் ‘இவ்வளவு நாளாகியும் அவனிடம் எரிந்து விழுந்த வண்ணமாகவே இருந்தார்.

அவன் வேலையில் சளைப்பவனல்ல. சுறு சுறுப்பிலும் அவனைக் குறை கூறவே முடியாது. அப்படியிருந்தும் தன்னிடம் மட்டும் இந்த மானேஜர் ஏன் எப்போது பார்த்தாலும் இப்படிச் சிடுசிடு வென்று வேட்டை நாய்போல இருக்கிறார் என்று அவனுக்குப் புரியவில்லை.

சிற்சில சமயம் இந்த வேலையை விட்டு ஒழித்து விட்டால் என்ன என்றுகூடத் தோன்றும் அவனுக்கு. அப்போதெல்லாம் வயதான அவன் தாய் அவன் கண்முன் வந்து நின்று அவன் எண்ணத்தைக் குலைப்பாள்.

அவன் கண்யமான நடுத்தரக் குடும்பம் ஒன்றைச் சேர்ந்தவன். தகப்பனார் காலத்தில் சொத்து, சுதந்திரம் எல்லாம் கொஞ்சம் இருந்தன. எல்லாவற்றையும் வியாஜ்ஜியத்திலேயே ஒழித்து விட்டுப் போய்விட்டார் அவர். கடைசியில் சிவராமனுக்கு மிஞ்சியது இன்றோ நாளைக்கோ என்று இருக்கும் அந்த வீடு ஒன்றுதான். அந்த வீட்டில் வாடகை இல்லாமல் இருக்கக்கூட யாரும் சம்மதிக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட நிலையில் இருந்தது அது. சிவராமன் அதையெல்லாம் பொருட்படுத்தாமல் தன் பூர்வீக சொத்து அல்லவா என்று அதிலேயே இருந்து வந்தான்.

சிறு வயதில் அவனை அவன் தகப்பனார் ஒழுங்காக வளர்க்காததால் அவனால் எஸ். எஸ். எல். ஸி.க்குமேல் படிக்க முடியவில்லை. அவர் பேரில் குற்றம் எப்படிச் சொல்ல முடியும்! கோர்ட்டுக்கும் வக்கீல் வீட்டுக்கும் போய் வரத்தான் அவருக்கு நேரமிருந்தது. அவன் தந்தை இறந்துவிடவே படிப்பும் அவ்வளவோடு நின்று போய் விட்டது.

அவனை மேலே படிக்க வைக்க அவன் தாய் படாதபாடு பட்டாள். உறவினர்களை அண்டினாள். நேற்று முன்வரை தன் வீட்டில் மாதக்கணக்கில் வந்து தங்கிக் கூத்தடித்த அவர்கள், உதவி என்று போனதும் முகம் கொடுத்துக்கூடப் பேசவில்லை. அவளுக்குச் ‘சட்’டென்று விட்டுப் போய் விட்டது.

எப்படியாவது குடும்பம் நடத்தியாக வேண்டும். என்ன செய்வது! பிள்ளையை ஏதாவது வேலைக்குப் போ என்றாள். இந்தப் படிப்புக்கு அவனுக்கு என்ன வேலை கிடைக்கும்! ஆனாலும் அவன் சளைக்காது காரியாலயம் ஒன்று விடாமல் ஏறி இறங்கிப் பார்த்து விட்டான். வேலை கிடைக்கவில்லை. இந்தச் சமயத்தில் யுத்தம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. குமாஸ்தா வேலைக்கு யுத்த இலாகாக்களில் ஆள் எடுத்துக்கொண்டிருந்தார்கள். அதில் சேர்ந்து விட்டால் என்ன என்று பட்டது அவனுக்கு. தாயாரைக் கேட்டான். முதலில் அவள் கொஞ்சம் யோசித்தாள். அப்புறமாகச் சம்மதம் தெரிவித்து விட்டாள்.

சிவராமன் மாதா மாதம் டாண் டாண் என்று பணம் அனுப்பிக் கொண்டிருந்தான். என்றாலும் ஆசைக்கு ஒரே பிள்ளையான அவன் உயிரோடு திரும்பி வருவானா என்று அவளுக்கு மிகவும் கவலையாக இருந்தது.

யுத்தம் முடிந்ததும் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள். ஊருக்கு வந்தான். கொஞ்ச நாள் கையில் இருப்பதை வைத்துக்கொண்டு நிர்விசாரமாக இருந்தான்.

ஆனால் அது எத்தனை நாளைக்குத்தான் ஓடும்! சீக்கிரமே மறுபடி வேலைக்குப் போயாக வேண்டுமென்ற நிர்ப்பந்த நிலை ஏற்பட்டு விட்டது. திரும்பவும் உத்தியோக வேட்டையில் இறங்கினான். வேலையில்லாத் திண்டாட்டம் காரணமாக அவன் மனுச் செய்த உத்தியோகங்களிலெல்லாம் பட்டதாரிகள் அமர்ந்தார்கள். அதனால் அவனுக்கு வேலை கிடைப்பதாகவே காணோம்.

கடைசியில் உள்ளூர் "ஜனதா பாங்கி"யில் வேலை காலியிருப்பதாக அறிந்து மானேஜர் மார்த்தாண்டத்தினிடம் போனான். காலில் விழாத தோஷமாகக் கெஞ்சினான். அவருக்கு அவன் பேரில் அநுதாபம் உண்டாயிற்று. அவன் குடும்பத்தைப் பற்றி அவருக்கு நன்கு தெரியுமாதலின் அவனைச் சேர்த்துக் கொண்டார். அதனாலேயே மார்த்தாண்டத்தின் அட்டகாசத்தையெல்லாம் அவன் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்துக் கொண்டிருந்தான்.

ஆபீஸ் பையன் பிச்சாண்டி சிவராமன் பேரில் அநுதாபம் கொண்டவர்களில் ஒருவன். அவன் தன் சொந்த அநுபவத்தைச் சொல்லி



புதுடில்லிக்குப் புகையிலைத் தூது சென்று வெற்றியுடன் திரும்பி வந்த இலங்கைத் தபால் இலாகா மந்திரி ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களையும் ஸ்ரீமதி நடேசன் அவர்களையும் சென்னையில் உள்ள நண்பர்கள் விமான நிலையத்தில் வரவேற்றனர்.

அவனுக்கு ஒரு யோசனை சொல்லிக் கொடுத் தான். வந்த புதிதில் மானேஜர் தன்னிடமும் இப்படித்தான் 'உர்' ரென்று இருந்தார் என்றும், கொஞ்ச நாள் சென்றதும் தான் மெல்லக் காக் காய் பிடித்து, இப்போது அவரை வழிக்குக் கொண்டு வந்து விட்டதாயும், அதேபோல் அவனையும் செய்யும்படி சொன்னான். அதைப் பரீட்சித்துப் பார்க்க எண்ணினான் சிவராமன்.

தனக்குச் சம்பந்தமில்லாத கடிதங்களை வாங்கிக் கொண்டு வந்து அழகாக 'டைப்' அடித்துக் கொண்டு போய்ப் பவ்யமாக மேஜைமேல் வைத்து விட்டுப் பணிவாக நிற்பான் சிவராமன். அலக்ஷி யமாகப் படித்து விட்டு "ஒரே தப்பு மயம்" என்று கசக்கிக் குப்பைக் கூடைக்குள் போடுவார் மார்த்தாண்டம். இல்லாத வேலையை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்ததற்குப் பலன் இதுவா என்று அவன் நெஞ்சு குமுறும். 'பில்ஸ் கிளார்க்' பிரணதார்த்தி தப்பும் தவறுமாக டைப் செய்து வைப்பதைப் பேசாமல் வாங்கிக் கையெழுத்துப் போடுகிற அவர், தான் சுத்தமாக டைப் செய்ததை ஏன் இப்படிக் கசக்கி எறிய வேண்டும்! அதை நினைக்க நினைக்க அவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

அவனுக்கு நிராசையும் வெறுப்பும் தோன்றி விட்டன. வேலைக்கு முழுக்குப் போடுவதைத் தவிர வேறு வழியில்லை என்று பட்டது. ஆனால் இந்த அவசர முடிவின் விளைவு எப்படி இருக்குமோ என்று பயமாகவும் இருந்தது.

யோசித்தான்; திரும்பவும் காக்காய் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டால் என்ன என்று பட்டது. அன்று முதல் எப்போது பார்த்தாலும் மானேஜ ரைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்தான். ஆபீஸ் பையன் மணிச் சத்தம் கேட்டு வருவதற்குத் தாமதமானால் அதற்குள் அவனே போய்ப் பியூ னின் வேலையைச் செய்து விடுவான். சாயந்திரம் பியூன், தபால்களைச் சேர்க்கவும், உள்ளூர் தபால்களைப் பட்டுவாடா செய்யவும் வெளியே போய்த் திரும்பி வர நேரமாகி விட்டால், அவனே மானேஜர் 'பைலை'த் தூக்கிக்கொண்டு அவர் பின்னால் அவர் வீட்டுக்குப் போவான். சக கிளார்க்குகள் ஏளனம் செய்தனர். "இந்தக் காக் காய்க்கெல்லாம் மசிந்து கொடுக்கிறவன் நானல்ல" என்று மார்த்தாண்டமும் ஒரு நாள் 'வெடுக்' கென்று சொல்லி விட்டார். ஆனாலும் அவன தன் முயற்சியில் விட்டுக் கொடுப்பதாக இல்லை.

அன்று மாலை மானேஜர் பின்னால் போனபோது அவர் வீட்டில் ஜன்னலிலிருந்து ஒரு பெண் எட் டிப் பார்ப்பதைக் கண்டு விட்டான். உடனே அவனுக்கு ஏக்கம் மனத்தைக் கவ்விக் கொண்டது. இத்தனை வயதாகியும் தனக்கு யாரும் பெண் தர முன் வரவில்லையே என்று மனம் மறுகியது. அப்பா இருந்தால் இன்று தன் நிலை இப்படியா இருக்கும் என்று எண்ணவும் அவனுக்கு நெஞ்சே வெடித்து விடும்போலாகி விட்டது.

அன்று மானேஜர் ஆபீஸுக்கு வரவில்லை; லீவு போட்டிருந்தார். சாவி வாங்கி வருவதற்காக அவனே ஆபீஸ் பையன் பிச்சாண்டியையும் முந்திக் கொண்டு மானேஜர் வீட்டுக்குப் போனான். இப் போது அவன் செய்கைக்கு முன்னைவிட இன் னொரு காரணமும் சேர்ந்து கொண்டது. அதெல் லாம் பற்றிப் பிச்சாண்டி கண்டானா! அவனுக்கு நல்லதாகப் போயிற்று 'கவுண்டர்' இடுக்கில் இரண்டு பழைய லெட்ஜர்களைத் தலைக்கு வைத் துக் கொண்டு அவன் காலை நீட்டிவிட்டான்!



வெற்றி மாலை சூடிக் கொண்டு விளங்கும் ஸ்ரீ எஸ். நடேசன் சென்னைப் பத்திரிகை நிருபர்களுக்குத் தாம் தூது சென்ற விவரம் பற்றித் தெரிவிக்கிறார்.

வீட்டில் போய் "ஸார்" என்றான் சிவராமன். அந்தப் பெண் வெளியே வந்து எட்டிப் பார்த்து விட்டு உள்ளே போய்ச் சாவியை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். அவ னையே பார்த்துக் கொண்டு சாவியை வாங்கக் கை நீட்டியதால் அவன் கை அவள் கையில் இடித்து விட்டது. என்ன காரணத்தாலோ அவள் உடனே லேசாகப் புன்முறுவல் பூத்தாள். அவன் அவளையே அசடுபோலப் பார்த்துக் கொண்டிருந் தான். இந்தச் சமயம் மானேஜர் மனைவி அங்கு வந்து விடவே அவன் பிரமையினின்று விடுபட்டவ னாய் ஆபீசை நோக்கி நடையைக் கட்டினான்.

அப்புறம் காவிரிப்படித்துறை, கோயில், கடைத் தெரு, சினிமாக் கொட்டகை முதலிய இடங்களிலெல்லாம் அவளை அவன் சந்திக்கச் சந் தர்ப்பம் கிடைத்தது. அவள் பார்வையும், தன் னைப் பார்க்கும் போது அவள் முகாரவிந்தம் மலர் வதும் அவன் எண்ணத்தை வலுவடையச் செய் தன. அவன் அழகன்தான் என்றாலும், செல்வவந்த ரான மானேஜர் பெண் கேவலம் ஒரு குமாஸ்தா வான தன்னைக் காதலிப்பாளா என்பதை அவன் நினைத்துப் பார்க்கவில்லை!

பாங்கியின் வருஷக் கணக்கு முடிந்தது. சிவரா மன் இராப்பகலாக வேலை செய்தான். ஆனாலும் மானேஜர் என்னவோ எப்போதும் போலத்தான் அவனிடம் நடந்து கொண்டார்.

பாங்கியின் மகாசபைக் கூட்டத்தின்போது சிவ ராமன் ஓடியாடி வேலை செய்தான். டைரக்டர்கள் எல்லோரும் அவனை மெச்சினார்கள். ஆனாலும் மானேஜர் மட்டும் அத்தனை பேர் மத்தியிலும் அவனை அலட்சிய பாவத்தோடு அதட்டுவதை நிறுத்தக் காணோம்.

அதனால் அவனுக்கு ஆத்திரம் அன்று எல்லைக் கோட்டை மீறிவிட்டது! தன்னை டைரக்டர்கள் முன்னிலையில் அவமானப் படுத்தியதற்காக அவரை மன்னிப்புக் கேட்க வைத்து விடுவது,

இல்லா விட்டால் பலம் கொண்ட மட்டும் அவர் கன்னத்தில் 'பளார்' என்று அறைந்து பழி தீர்த்துக் கொண்டு விடுவது என்ற அசட்டுக் கோபத்தோடு அவர் வீட்டுக்குப் போனான். வீட்டு வாசலில் போய் நின்று "ஸார்!" என்றான் கனைத்துக் கொண்டு!

மார்த்தாண்டம் கண்ணாடியைத் துடைத்துப் போட்டுக் கொண்டே வெளியே வந்தார். கண்ணாடியை அணிந்து கொண்டதும், "அடேடே, சிவராமனா, வா அப்பா, உன்னைப் பற்றித்தான் இப்போது பேசிக் கொண்டிருந்தேன்" என்றார் சாவகமாக. ஆத்திரம் தீரக் கையை அழுத்திப் பிசைந்து கொண்டிருந்த சிவராமனுக்கு இதைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது.

"எதற்கு வாசலிலே நிற்கணும்...வா உள்ளே போகலாம்" என்று கனிவோடு அழைத்தவாறு அவர் உள்ளே போனார். உள்ளே போய் ஸோஃபாவில் உட்கார்ந்தார் அவர். அவர் அருகே போய்ச் சங்கோசத்தோடு வணக்கமாய் நின்றான்.

"பரவாயில்லை......உட்கார் சிவராமா......ம்... பாதகமில்லை......நீ பரீட்சையில் தேறிவிட்டாய்... இனி மேல் உட்காரலாம்" என்று கூறி அவர் சிரித்தார். பக்கத்தில் தூணில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்த அவர் மனைவியும் திருப்தியோடு முறுவலித்தாள். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாம் ஒரே மர்மமாயிருந்தன. "இருக்கட்டும், ஸார்" என்றான் சிவராமன்.

அவர் ஸோஃபாவிலிருந்து எழுந்து வந்து அவனைக் கையைப் பிடித்துத் தன் அருகே உட்கார வைத்துக் கொண்டார். லஜ்ஜையோடு உட்கார்ந்திருந்த சிவராமன் ஒன்றும் விளங்காமல் 'திருதிரு' என்று விழித்துக்கொண்டிருந்தான். ஒரு வேளை அவர் பெண், தான் ஏதாவது தவறாக லாக நடந்து கொண்டதாகச் சொல்லி விருப்பானோ என்ற பயம் வேறு மனதில் ஒரு மூலையிலே எழும்பிக் குதித்துக் கொண்டிருந்தது.

தன் பெண் கொஞ்சம் துடுக்கானவள் என்பதால் அவளை வைத்துக் கொண்டு குடித்தனம் பண்ண அவனுக்குப் பொறுமை இருக்குமா என்று பரிசோதித்துப் பார்க்கவே இப்படி அவனிடம் தாம் சிடுசிடுப்புக் காட்டியதாயும், சோதனையில் வெற்றி பெற்று விட்டதால் அவனுக்குத் தம் பெண்ணைக் கொடுக்கத் தீர்மானித்து விட்டதாயும் அவர் சொன்னதும் சிவராமன் ஆச்சரியத்தால் அயர்ந்து போனான். தான் எங்கிருக்கிறோம் என்றே புரியவில்லை அவனுக்கு!

இந்தச் சமயம் அவர் பெண் காப்பி கொண்டு வந்து வைத்தாள். மார்த்தாண்டம், "ஏன் அம்மா, இவரை உனக்கு யாரென்று தெரிகிறதா!" என்று கேட்டு விட்டுச் சிரிக்கவும் அவள் "போங்கள், அப்பா!" என்று கொஞ்சியவாறு உள்ளே ஓடினாள். ஓடியபோது அவள் தன்னைக் கடைக் கண்ணால் பார்த்து விட்டுப் போனதைச் சிவராமன் கவனிக்காமலில்லை. உடனே அவர் மனைவி, "நன்றாயிருக்கிறது. 'தெரியுமா' என்று புதிதாகக் கேட்கிறீர்களே! நீங்கள் லீவில் இருந்த அன்றைக்குத் தான் அவள், மாப்பிள்ளையைப் பார்த்து விட்டாளே!" என்றாள் நிம்மதியோடு. மார்த்தாண்டம் தன் புகையிலைக் காவி ஏறிய பற்கள் தெரியப் பலமாகச் சிரித்தார்!

ஒரு நல்ல சுப முகூர்த்தத்தில் ஜனதா பாங்க் ஹெட்க்ளார்க் சிவராமன் தம் மானேஜர் மார்த்தாண்டத்தின் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டார் என்று பத்திரிகைகள் தம்பதிகளின் புகைப் படங்களுடன் செய்தியை வெளியிட்டன!



ஹைதராபாத் சார்ட்டர்டு அக்கௌண்டன்டு ஸ்ரீ ஏ. எஸ். ஏ. நடராஜ அய்யர் குமாரத்தி சௌபாக்யவதி மங்களாவுக்கும், ஈரோடு சார்ட்டர்டு அக்கௌண்டன்டு ஸ்ரீ கே. ஆர். கணபதி அய்யர் குமாரன் ஸ்ரீ ஜி. நாகராஜனுக்கும் (ஹவுஸ் ஸர்ஜன், ஹெட் குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரி கன்னிக்கோட்டை) ஹைதராபாத்தில் சென்ற மாதம் மிகவும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்கும் அன்று மாலை நடந்த விருந்து உபசாரத்திற்கும் ஹைதராபாத் நகரத்துப் பிரமுகர்கள் அனைவரும் விஜயம் செய்து சிறப்பித்தனர். மணமக்களுக்கு பாரதக் குடியரசின் ராஷ்டிரபதியும், யூனியன் மந்திரிகளும், மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன.




## 3. சற்று நில்!

ஒரு நாள் காலை மந்திரவாதிக் கிழவன் பிரபாவைக் கூப்பிட்டான். "என்ன தாத்தா!" என்று கேட்டுக் கொண்டே துள்ளி ஓடி வந்தாள் பிரபா.

"நான் இன்றைக்குக் கொஞ்சம் வெளியூர் போய் விட்டு வரவேண்டும். நீ பத்திரமாய், பயப்படாமல் இருப்பாயோ?" என்று கேட்டான் கிழவன்.

இம்மாதிரி எத்தனையோ நாட்கள் பிரபாவைத் தனியாக விட்டு விட்டுப் போயிருக்கிறான். அப்படிப் போகும் ஒவ்வொரு தடவையும் கிழவன், "நீ பத்திரமாய், பயப்படாமல் இருப்பாயோ?" என்று கேட்பான். அதற்குப் பிரபா, "லக்ஷ்மி யிருக்கும் போது எனக்கு என்ன தாத்தா பயம்? நீ என்னைப் பற்றிக் கவலைப் படாமல் போய் விட்டு வா, தாத்தா!" என்று சொல்லியனுப்புவாள். இது ஒரு வழக்கமாகி விட்டது. அம்மாதிரியேதான் இன்றும் அவள் சொல்லி யனுப்பினாள்.

'லக்ஷ்மி' என்று பிரபாவதி குறிப்பிட்டாளே? அவளும் ஒரு வேளை பிரபாவைப் போல் மற்றொரு தேசத்து ராஜகுமாரியோ என்ற சந்தேகம் உங்களுக்கு உண்டாகிறதல்லவா? அதுதான் இல்லை. 'லக்ஷ்மி' என்று பிரபா குறிப்பிட்டது ஒரு பசுமாட்டைத்தான்.

பிரபா, பாவம், அரண்மனையில் வளர்ந்தவளாயிற்றே! அந்த அரண்மனையில் இருக்கும் சௌகரியங்களில் நூற்றில் ஒரு பங்குகூடத் தன்னால் செய்ய முடியாதே! ஆயினும் தினம் பிரபாவுக்குத் துணையாக இருப்பதற்கும், குடிப்பதற்குப் பால் கொடுப்பதற்கும் ஒரு பசுமாடு இருக்கட்டும் என்று மந்திரவாதிக் கிழவன் வாங்கிக் கட்டினான். ஆமாம், அவன் தன் மந்திர சக்தியால் ஒரு பிடி மண்ணைக் கூடப் பசு மாடாகச் செய்திருக்கலாம். அப்படிப் பட்ட மந்திர மாடு மூன்றே முக்கால் நாழிகை தானே உயிரோடு இருக்கும்; பிறகு அது பழையபடி ஒரு பிடி மண்ணாக மாறி விடும் அல்லவா? இதற்குப் பயந்துதான், பணம் கொடுத்தே ஒரு வெள்ளைப் பசுமாட்டை வாங்கிக்கொட்டிலில் கட்டி யிருந்தான்.

அந்தப் பசுவுக்குப் பிரபா, 'லக்ஷ்மி' என்ற அழகிய பெயரைச் சூட்டினாள். 'லக்ஷ்மி' 'லக்ஷ்மி' என்று கூப்பிடுவாள். 'லக்ஷ்மி' என்று பிரபா கூப்பிடும் குரல் கேட்டால் போதும். தன் இரண்டு காதுகளையும் நிமிர்த்திப் பிரபா இருக்கும் பக்கமாகத் திரும்பி, 'ஏன், எதற்குக் கூப்பிட்டாய்?' என்று அன்புடன் கேட்பது போல் ஒரு பார்வையை வீசும் அந்தப் பசு.

லக்ஷ்மியைக் குளிப்பாட்டுவது; புல் செதுக்கிக்கொண்டு வந்துபோடுவது; தண்ணீர் காட்டுவது; பால் கறப்பது எல்லாம் பிரபாதான் செய்வாள். இந்த வேலைகள் எல்லாம் செய்வதில் அவளுக்குத் தனியான தோர் ஆனந்தம். ஓடி ஓடிச் செய்வாள். இதைப் பார்க்கும் அந்த மந்திரவாதியின் கடினமான நெஞ்சில் 'ஆகா, அரண்மனையில் சொகுசாக இருக்க வேண்டிய இவளை இப்படி வேலை செய்யப் பண்ணுகிறோமே' என்ற எண்ணம் ஒவ்வொரு சமயம் தோன்றும். அப்பொழுது அவனுடைய கண்கள் அவனை அறியாமலே இரண்டு சொட்டுக் கண்ணீரைச் சிந்தும். ஆனால், பிரபாவதி தான் ஒரு ராஜகுமாரி என்பதையே மறந்து விட்டிருந்தாளே! ஆகவே அவள் இந்த வேலைகளை யெல்லாம் செய்து கொண்டு சந்தோஷமாக இருந்து வந்தாள்.

இன்று மந்திரவாதி வெளியே சென்றவுடன், பிரபாவதி மாட்டுக் கொட்டிலுக்குச் சென்று, லக்ஷ்மியைக் கட்டு அவிழ்த்துத் தும்பைக் கையில் பிடித்துக் கொண்டாள். காட்டில் மேய ஓட்டிச் சென்றாள்.

காட்டில் அவள் ஒய்யாரமாகக் குதித்துக் களித்துச் சென்றபோது ஒரு வன தேவதையே சென்றது போலிருந்தது.



அவள் சென்ற வழி நெடுகப் பட்சி ஜாலங்கள் இனிய குரல்களில் 'கீச் மூச்' என்று சத்தமிட்டன. அது, வன ராணியை அன்பு மொழி கூறி வரவேற்பது போலிருந்தது.

செடிகளிலும், கொடிகளிலும் வண்ண வண்ணப் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கின. இவற்றினிடையே பிரபாவதி தன் முத்துப் போன்ற பற்கள் தெரிய முறுவலித்த வண்ணம் சென்றபோது, இந்தப் புஷ்பங்களும் தங்கள் இதழ் விரித்து வரவேற்பது போலிருந்தது!

பிரபாவதி இவற்றினிடையே சென்ற போது, ஓரிடத்தில் நின்று, ஒரு மலரைப் பறித்து அதன் வாசனையை முகர்ந்து பார்ப்பாள். மற்றோர் இடத்தில் நின்று அங்கு பூத்துச் சிரிக்கும் ஒரு புஷ்பத்தின் அடுக்கான இதழ்களைக் கண்டு அப்படியே வியந்து நிற்பாள். லக்ஷ்மி இதைச் சற்றும் பொருட் படுத்தாமல் பசிய புல்லைமேய்ந்து கொண்டிருந்தது.

இந்தச் சமயத்தில் எங்கிருந்தோ காற்றினில் இனிய குழலோசை மிதந்து வந்தது. சற்று நேரம் பிரபாவதி காற்றினிலே வந்த அந்தக் கீதத்தைக் காது கொடுத்துக் கேட்டாள். கேட்கக் கேட்க உடம் பெல்லாம் புல்லரித்தது. இனந் தெரியாத இன்பம் நுகரலானாள். பின்னர் அவளுடைய கால்கள் அவளை அறியாமலே, குழலோசை வந்த திசையை நோக்கி இழுத்துச் சென்றன.

அங்கே, ஒரு பாறையின் மீது பதினொன்று, பதினைந்து வயது மதிக்கத் தக்க ஓர் இளைஞன் அமர்ந்து புல்லாங்குழலை ஊதிக் கொண்டிருந்தான். தன் குழலிலிருந்து எழும் இன்ப கீதத்தில், கண்கள் மூடி லயித்து ஊதிக் கொண்டிருந்தான். சற்றுத் தூரத்தில் பிரபாவதியும் மெய் மறந்து நின்று கேட்டுக் கொண்டிருந்தாள். அப்போது அவள் கண்களும் மூடி விட்டன!

கொஞ்ச நேரத்தில் கீதம் முடிந்தது; குழலோசை நின்றது; இளைஞன் கண்களைத் திறந்து பார்த்தான். தூரத்தே அழகுத் தெய்வம் அவதரித்தாற்போல நின்று கொண்டிருக்கும் பிரபாவதியைப் பார்த்தான். அப்படியே அவள் எழிலில் சித்தம் திகைத்து நின்றான். பிறகு அவனுக்கு மனதில் ஏதோ ஒரு சந்தேகம் ஏற்பட்டது. எனவே மெல்லிய குரலில், "மோஹினி" என்று கூப்பிட்டான். அவன் குரலைக் கேட்ட பின்னர்தான், பிரபாவதி விழித்துக் கொண்டாள். சங்கீதம் கேட்டுக் கொண்டிருந்த பிரபாவதி, குழலோசை முடிந்த பிறகும், அதே இன்பத்தில் லயித்திருந்தாள். அதனால் தான் அவள் கண்களைத் திறக்கவே இல்லை.

அந்த இளைஞன் 'மோஹினி' என்ற குரல் கொடுத்த பிறகுதான், அவள் இந்த உலகத்துக்குத் திரும்பி வந்தாள்.

பின்னர், அந்த இளைஞன் 'மோஹினி' என்று யாரையோ கூப்பிடுகிறான் என்று நினைத்து, அவள் வந்த திசையை நோக்கிச் சென்றாள்.

பிரபாவதி திரும்பிச் செல்கிறாள் என்பதை அறிந்ததும், "மோஹினி! மோஹினி!" என்று இன்னும் பலமான குரலில் கூப்பிட்டான். பிரபாவதி திரும்பிப் பார்த்தாள்.

உடனே அந்த இளைஞன், "மோஹினி, உன்னைத்தான் கூப்பிடுகிறேன். சற்று நில்!" என்று சொல்லி அவன் உட்கார்ந்திருந்த பாறையை விட்டு எழுந்திருந்து பிரபாவதியை நோக்கி ஓடி வந்தான்.

அருகில் வந்ததும், "மோஹினி......" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

"முதலில் என் பெயர் மோஹினி அல்ல.......!" என்றாள் பிரபாவதி.

"ஓ! நான் புல்லாங் குழலில் மோகன ராகம் பாடிக் கொண்டிருந்தேன், அல்லவா? அதைப் பாடி முடித்தவுடன் கண்களைத் திறந்து பார்த்தேன்—நீ மெய் மறந்து நின்று கொண்டிருந்தாய். இந்தக் காட்டில் உடலும் உயிரும் கொண்ட ஒரு பெண் எப்படி வரக் கூடும்? ஆகவே நீ மானிடப் பெண் அல்ல. என் மோகன ராகத்தின் அதி தெய்வமான மோஹினியே என் பாட்டைக் கேட்க வந்திருக்கிறாள் என்று நினைத்தேன். அதனால்தான் உன்னை மோஹினி என்று கூப்பிட்டேன்" என்றான் அந்த இளைஞன்.

அந்த இளைஞனின் சாமர்த்தியப் பேச்சைக் கேட்டுப் பிரபாவதி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள்.

"மோஹினி, சிரிக்கிறாயே! உன் பெயரைச் சொல்ல மாட்டாயா?" என்றான்.

"என் பெயர் பிரபாவதி!"

"ஆகா! உன் பெயர் எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்றான் அந்த அழகிய இளைஞன்.

"அதுசரி, உன் பெயர் எனக்குச் சொல்லவில்லையே!" என்றாள் பிரபா. (தொடரும்)

# டாடா அக்ரிகோ கருவிகள்

உறுதியானவை, பலமானவை, நீடித்துழைக்கக்கூடியவை. அவை ஹை கார்பன் எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டவை. வேலை செய்வதற்கு ஏற்றவாறு அவை தயாரிக்கப்பட்டு தீட்டப்பட்டவை. எல்லாவித சோதனைகளிலும், அக்ரிகோ கருவிகளே சிறந்தவைகளாகக் கருதப்படுகின்றன.



மேற்கு இந்தியக் கொத்து



டாங்க் மண்வெட்டி





மைசூர் மண்வெட்டி



சிலோன் ஹெக் மண்வெட்டி

எல்லாவித நிலங்களுக்கும்

## அக்ரிகோ

கருவிகளே தகுதியானவை



**தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**

ஹெட் ஆபீஸ்:

23B, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா-1

கிளை ஆபீஸுகள்:

பம்பாய், மதராஸ், நாக்பூர், அஹமதாபாத், செகந்திராபாத், விஜயநகரம் கண்டோன்மெண்ட், ஜலந்தர் கண்டோன்மெண்ட், கான்பூர்.

AG-3358

# வட்ட மேஜை

நான் ஐந்தாம் வகுப்புவரை படித்து விட்டுப் பள்ளியை விட்டு நீங்கியபோது எனக்கு வயது 12. நெசவுத் தொழில் பழகுவதற்காகப் படிப்பை விட்டேன். நான்கு ஐந்து ஆண்டுகளில் அத்தொழிலில் தேர்ச்சி யடைந்தேன். என் குடும்பத்துக்கு ஓரளவு வருவாய் கிடைத்து வந்தது. இச்சமயத்தில் எனக்குப் படிக்க வேண்டும் என்ற அவா ஏற்பட்டது. ஒரு இரவுப் பள்ளியில் சேர்ந்து படித்தேன். ஐந்து வருஷப் படிப்பை விட்டு விட்டதால் ஒரு வருஷத்திய படிப்பு வீணாகி நாலாவது வகுப்பில் சேர்ந்தேன். இப்போது எட்டாவது வகுப்பில் படித்து வருகிறேன்.

என்போன்ற அநேக மாணவர்கள், நான் படிக்கும் பள்ளியில் சேர்ந்து படிக்கிறார்கள். நாள் முழுதும் கஷ்டப்பட்டு வேலை செய்யும் நாங்கள் ஓய்வு கொள்ளாமல், இரவு பாடசாலையில் சேர்ந்து படிக்கிறோம். இதே கஷ்டம் நாற்பது லட்சம் குழந்தைகளுக்கு ஏற்படாதபடி நம் முதன் மந்திரி ராஜாஜி கொண்டு வந்துள்ள இப்புதிய கல்வித் திட்டத்தை நாங்கள் மனமார ஆதரித்துப் போற்றுகிறோம்.

கோவை
19—7—53 மு. சோமசுந்தரம்.

●

பிள்ளைகளை ஆசிரியர்களிடம் ஒப்படைத்துத் தொந்தரவில்லாமல் சில மணி நேரமாவது அக்கடா என்றிருக்க நினைப்பவரும், உத்தியோகம் செய்ய வேண்டாம் சாப்பிடப் போதியச் செல்வமிருக்கிறது என்று நினைக்கும் தனவந்தர்களும், ராஜாஜி அவர்கள் மேல் துவேஷமோ, தத்தம் தீர்மானப்படி எதையாவது சாதிக்கவோ எண்ணுபவர்கள் மட்டுமே இப்புதிய கல்வித் திட்டத்தை ஏழை மக்களின் நன்மையைக்கூடக் கருதாது எதிர்ப்பவர் என்பது தெளிவாகிறது.

அதே சமயத்தில் ஆப்பக்காரி முதல் ஆபீஸர் வரையுள்ள சகல தொழிலாளர்களும், இக்கல்வித் திட்டத்தைத் தங்கள் குழந்தைகளைப் போலவே தாமும் பெருமிதத்துடன் வரவேற்கின்றனர். நூல் நூற்கவும், கடைக்குப் போகவும், கடைகளில் உட்காரவும், உணவு கொண்டுபோகவும், வயல், தொழிற்சாலைகளுக்குக் கஞ்சி கொண்டு போகவும் உதவியாவதோடு நாலெழுத்துக் கற்கவும் சந்தர்ப்பம் வாய்த்ததே என்பதில் எளியவர்களுக்கு மகிழ்ச்சி.

இரண்டு வேளை பாடசாலை என்னும் சிறைவாசமும் கடுங்காவலும் இருந்தபோது மணி ஆக ஆகப் பையன்கள் வீண்வம்பு பேசலாயினர்; பிறகு பையை எடுத்துக் கொண்டு ஓடிவிடுவதிலேயே இருந்தனர். வீட்டிலும் பெற்றோரை ஏமாற்றிப் பையோடு கோவில் கூத்துக் கொட்டகைகளில் உறங்கி டிபன் சாப்பிட்டு வந்தனர். படிப்பும் பாடசாலையும் நரகாவஸ்தையாக நினைத்த மாணவர்கள் இப்போது குறித்த காலத்துக்கு முந்தியே வந்து அமைதியோடிருந்து அக்கறையோடும் ஆவலோடும் பாடங்களைக் கற்கின்றனர்.

இத்திட்டப்படி படிப்புக் குறையவில்லை என்பதை நன்கறிய வேண்டும். 1. குறிப்பிட்ட 220 நாட்களில் பாடங்கள் திட்டப்படி கற்பித்து முடிக்கப்படுகிறது. 2. ஆறு மணி நேரம், 8 காலங்கள் வேலை நடைபெறுகிறது. 3. சனிக்கிழமை முழு நாளும் வேலை. ஆக இருதிறத்தினருக்கும் உழைப்பும், ஊக்கமும் உற்சாகமும் முன்னைவிட இப்போது அதிகரித்து அதிக நன்மை பயக்கத் தக்கதாயுள்ள சிறந்த குருகுல முறை போன்றது இந்தக் கல்வித் திட்டம்.

இளம் வயதிலிருந்தே சிறுவர்கள் கல்வி, தொழில் இரண்டிலும் தக்க முறையில் பயிற்சி பெற்றால் காலம் வந்தபோது ஏதேனு மொன்றிலோ இரண்டிலுமோ உழைத்துப் பொருளீட்டி வாழ்க்கையை இனிது நடத்தி மகிழ்வர்.

குறிஞ்சிப்பாடி
20—7—53 டி. வி. சாவித்திரிபாய்.
(போர்டு உயர்தர எலிமெண்டரி ஸ்கூல்)

●

மறைமுகமாகவும் பகிரங்கமாகவும் கிளம்பிய எதிர்ப்புக் கோஷங்களுக் கிடையே அமுலுக்குக் கொண்டு வரப்பட்ட புதிய கல்வித் திட்டம் ஆரம்பிக்கப்பட்டு ஒரு மாதகால மாகிவிட்டது. மறைமுகமாக எதிர்த்தவர்களில் ஒரு பகுதியினர் ஆரம்ப ஆசிரியர்கள். இவர்கள் ஆதரிப்போர், எதிர்ப்போர், அரை மனதுடன் ஆதரிப்போர் என முப்பிரிவினராக இருந்தனர். இவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். திட்டம் அமுலுக்கு வந்த சில நாட்களில் என் மனம் மாறுதலடைந்தது.

மாணவர்கள் பண்டைய தொழில் முறைகளையும், உடலுழைப்பையும் மறந்து சோம்பேறிகளாக ஆரம்பித்து விட்டதைத் தடுப்பதற்காகவென்று ஏற்பட்ட புதிய கல்வித் திட்டம், பிரஸ்தாபக் குறைபாடுகளை நீக்கவல்லதல்ல என்றே என்னைப் போன்றோர் நினைத்து வந்தனர். இதற்கு மாறாக அதன் பலன் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் வெளிப்படையாகி விட்டதால் நான் மட்டுமல்ல. ஆசிரிய சமூகமே இப்பொழுது ஆதரித்து வருவதோடு முழு மனதுடன் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது.

உண்மையை உணர்ந்தேன்! உழைக்கிறேன்! ஆயினும், இன்று இளங்கொழுந்துகளிடையே புகுத்தப்படுகின்ற உடலுழைப்புத் தத்துவம், பிற்காலத்தில் உயர்நிலைப் பள்ளியில் மூன்றாண்டுப் படிப்பிலேயே மூழ்கடிக்கப் பட்டுவிடுமே என்று அஞ்சுகிறேன். கிராமாந்திர மாணவர்களில் பெரும்பாலோர் அண்மையிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்குக் கல்வியின் நிமித்தம் சென்று வரும் போது தம்மிடமுள்ள நற்பண்புகளை யெல்லாம் மறந்துவிடும் வாய்ப்பைப் பெறுகின்றனர்.

இவ்வித விபரீத விளைவுகள் பிற்காலத்தில் ஏற்படாமலிருக்க வேண்டும். ஆகவே, சிறந்த முறையில் அடிப்படைக் கல்வியை வகுத்துக் கொடுத்த நமது ராஜாஜி அவர்கள் செகண்டரி கல்வியையும் இந்த அடிப்படையில் மாற்றியமைக்க முயலுவார்களென்று நம்புகிறேன்.

சென்னிகுளம் எஸ். பெருமான்சாமி
14-7-53 ஆரம்ப ஆசிரியர்
(அண்ணாமலை எலிமெண்டரி ஸ்கூல்)

●

“எந்தக் கணக்கில் எழுதுவது?” என்ற கட்டுரையை 12—7—53 கல்கி இதழில் படித்தேன். புதிய கல்வித் திட்டப்படி குழந்தைகள் மூன்று மணி நேரம் படித்து விட்டு மீதி நேரத்தில் தொழிலாளியிடம் தானாகப் பார்த்து, செய்து தொழில் கற்றுக் கொள்ள வசதியிருக்க அத்திட்டத்தை எதிர்ப்பவர்கள் நோக்கம் அறியக்கூடாமலிருக்கிறது. ‘ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளை



ஜூலை 11-ந்தேதி சனிக்கிழமை மாலை மாம்பாக்கம் குருகுலத்திலிருந்து திருமுறைகளோடு வந்த திருக்கூட்ட அன்பர்களும், சென்னையிலிருந்து ஆயிரக் கணக்கில் வந்த அன்பர்களும், திருக்கழுக்குன்றத்து மலையடிவாரத்தில் திரளாக ஒன்று சேர்ந்து தாழக் கோயிலுக்குச் சென்று திரிபுரசுந்தரியைத் தரிசனம் செய்தனர். ஞாயிறு காலை ஏழு மணிக்குச் சென்னையிலிருந்து திருப்புகழ் மணி அவர்கள் வந்ததும், அடியார் கூட்டம் புடைசூழத் திருப்படி விழா துவக்கப்பட்டது. மலை உச்சி முதல் அடிவரையில் அன்பர் கூட்டம் படிகளில் நிறைந்து இடைவெளியின்றிக் கூட்டம் நெருக்கமாக மலைமேல் சென்று வழிபாடியற்றினர். மாலை சொக்கம்மை மலைச்சாரலில் ஆசிரியர் இளவழகனார் அவர்கள் தியான வகுப்பு நடத்தினார். இரவு நாகர்கோயில் திரு கே. ஆறுமுக நாவலர் அவர்கள் திருவாசகம் பற்றிச் சொற்பொழிவு நடத்தினார். திங்கள் காலை மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீன கர்த்தர் தவத்திரு சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையில் திருமுறை பேரவை தொடங்கிற்று. தலைமையுரைக்குப் பின் திரு இராசேச்சுவரி அம்மையார் சொற்பொழிவாற்றினர். பிற்பகல் அடையாறு கலாட்சேத்திர அதிபர் திருமதி ருக்மணி அருண்டேல், ஸ்ரீ சுவாமிநாதன், ஸ்ரீ கிருபானந்தவாரியார், ஸ்ரீ வீர சிவசுப்பிரமணியம் முதலியோர் பேசினர். இதற்குப் பின் மலையடிவாரத்தில் திரு எம். எம். தண்டபாணி தேசிகரின் இசையரங்குடன் விழா இனிது முடிவுற்றது. மூன்று நாட்களிலும் வந்திருந்த ஆயிரக்கணக்கான அன்பர்களுக்கு

---

யுமா !' சிறு பிராயத்தில் தொழிலில் கவர்ச்சியும் முயற்சியும் ஏற்பட்டால்தான் பையன் 'தேகப் பிரயாசையை' ஒரு அவமானமாகக் கருதமாட்டான். எதிர்ப்புகளுக்குப் பதிலாக ஓய்வு, ஒழிவு, அலுப்பு, கோபம், சலிப்பு இன்றித் தினந்தோறும் பல கூட்டங்களில் ஆணித்தரமாகப் பதில் சொல்லி வரும், ஸ்ரீ ராஜாஜி அவர்களுக்குப் பொதுவாக எல்லோரும், குறிப்பாக ஆசிரியர்களும் ஓர் பக்கபலமாயிருந்து உதவி செய்யலாம்; செய்ய வேண்டும். குறைபாடுகள் இருந்தாலும் மாறுதல் வேண்டினும் செய்து கொள்ளலாம் என்று அவரே கூறியுள்ளார். ஆகையால் செய்ய வேண்டிய முக்கிய அவசரமான தேவைகளைக் கூறித் திட்டம் வெற்றி பெற முன்வர வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

ஆசிரியர்களின் சிரமம் கொஞ்சம் அதிகரித்திருக்கிறது என்பதை யாவரும் உணர்ந்திருக்கின்றனர். சம்பளமும் அதிகப்படுத்த வேண்டியதுதான். பொருளாதார நிலை இடங்கொடுக்கவில்லை என்று சொல்லிக் கொண்டே இருந்தால் முடியுமா ! நிறம்பட வேலை செய்ய வேண்டிய கடமையும், ஏற்ற ஊதியம்பெற உரிமையும் ஆசிரியர்களுக்கு உண்டு.

படிப்பில்லாமல் இருக்கிற பிள்ளைகளை அழைத்து வருவது ஆசிரியர் ஒருவரால் முடியவே முடியாது. பெற்றோர், ஊர் பெரியதனக்காரர், துரைத்தனத்தாரின் உத்தரவு, சங்கங்கள் முதலிய எல்லாம் சேர்ந்து வேலை செய்தால் ஏதாவது பலன் எதிர்பார்க்கலாம். அதுவரை, உபாத்தியாயர்கள் பெற்றோர்களைச் சந்தித்து, வேலைக்குக் குந்தகமின்றி எழுத்தறிவு பெற வசதி உள்ளதை எடுத்துச் சொல்ல வேண்டியது கடமையாகிறது.

பள்ளிக்கூடமே எட்டிப் பார்க்காத வயது வந்த பிள்ளைகளைச் சேர்ப்பதில் உபயோகமில்லை. 12 வயது பையன் 5 வயது பையனுடன் வந்து உட்கார்ந்து அ, ஆ கற்றுக் கொள்வானா ! ஆகவே வேறு வகை செய்து இரண்டு வருஷங்களில் அவனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்து நாலு, ஐந்து வகுப்பில் அப்படிப்பட்ட பிள்ளைகளைச் சேர்க்க வழி செய்யவேண்டும்.

உபாத்தியாயர்கள் இன்னும் ஊக்கத்துடன் பாடுபட்டால் கட்டாயம் நூற்றுக்கு நூறு பிள்ளைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்கலாம்.

உலகப்பம்பாளையம் டி. சிவராம சாஸ்திரி
17—7—53 தலைமை ஆசிரியர்
(போர்டு உயர்தர எலிமெண்டரி பாடசாலை)

●

திருத்தணி எல்லைத் தகராறு கிளர்ச்சிக்காக ரயில்களை நிறுத்திப் பொதுஜன அமைதிக்குப் பங்கம் ஏற்படுவதைக் கண்டிக்கும் முறையில் பாரதத்தின் தலைவர் நேரு அவர்கள், "எல்லைத் தகராறுக்காக ரயில்களை நிறுத்திக் குழப்பம் விளைவிப்பது சிறு பிள்ளைகள்கூட செய்தறியாத முட்டாள்தனம்" என்று சொன்னதைப் பெரியதாக வைத்துக் கொண்டு ரயில் வண்டிகளை நிறுத்தி, பொதுஜனங்களுக்கு அசௌகரியம் ஏற்படுத்தியது அறிவுள்ள செயல் இல்லை என்று நான் சொல்லுகிறேன். நாற்பது லக்ஷம் பிள்ளைகள் படிப்பதற்கு இடம் இல்லாமல் தற்குறிகளாக இருப்பதைத் தடுத்து எல்லாக் குழந்தைகளும் படிப்பதற்கு வசதி செய்யும் ராஜாஜியின் ஆரம்பக் கல்வித் திட்டத்தையும் எதிர்த்துச் செய்யும் குழப்பம், அதைவிட முட்டாள்தனம் என்று சிறு பிள்ளைகள்கூடச் சொல்லும். பாகிஸ்தான் பிரிவினைக்குக்கூட ராஜாஜிதான் முதலில் ஆமோதித்தார். அதை எல்லோரும் கண்டித்தார்கள். பிறகு நடந்தது எல்லோருக்கும் தெரியும். அப்படிப்பட்ட தீர்க்கதரிசி கொண்டு வந்து இருக்கும் திட்டத்தை எதிர்த்துக் குழப்பம் விளைவிப்பது பகுத்தறிவுள்ளவர்கள் செய்யக்கூடிய காரியமில்லை.

"கொண்டிக் குதிரைக்குச் சறுக்கியது சாக்கு" என்பது போல இவர்கள் செய்யும் கிளர்ச்சி பொது மக்களுக்குத் தெரியும். ஆகையால் கல்வி இலாக்கா அதிகாரிகளை, இந்தத் திட்டத்தைத் தமிழ் நாட்டில் எல்லாக் கிராமங்களிலும், நகரங்



வண்ணையம்பதி சிவத் திரு வள்ளியம்மையார் உணவு வழங்கினர். மாம்பாக்கத்திலிருந்து திருமுறைகள் கால்நடையாக வரும் வழியில் கருங்குழியிலும், வல்லிபுரத்திலும், வழுவத்தூரிலும் உள்ள அன்பர்கள் மண்டகப்படி சிறப்பாக நடத்திவைத்தனர். திருக்கழுக்குன்றக் கோயிலையும் இந்த விழாவில் பங்குபற்றிச் சிறப்பித்த பக்தர்களையும் படங்களில் காணலாம்.

களிலும் உடனடியாக அமுலுக்குக் கொண்டு வரும்படி தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன்.

செங்கற்பட்டு
20—7—53 ஏ. கே. மகாலிங்கம்.

●

புதுக் கல்வித் திட்டமானது இம்மாகாணத்தில் எல்லாக் கிராமங்களிலும் அமோக வரவேற்புடன் ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டு ஜூன் மாதம் 1௳ முதல் நடந்து வருகிறது. இத்திட்டத்தைப் பற்றிச் சில இடங்களில் மறியல் நடந்து வருவதாகப் பத்திரிகை வாயிலாகப் பார்த்தேன். இதற்காக மறியல் என்பது அர்த்தம் இல்லாத விஷயம். என் ஐம்பது நாள் அனுபவத்தில் இத்திட்டமானது நம் நாட்டிற்கு ஏற்றது என்று சொல்லும்படியாக இருக்கிறது. ஆசிரியர்களுக்கு ஓரளவு வேலை அதிகமானாலும் இத்திட்டத்தில் குறைகூற இடமில்லை. அநேகம் பெற்றோர்கள் சிறு பிள்ளைகளை வீட்டிலேயே வைத்துக் கொள்வதால் கஷ்டம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள். வாஸ்தவம். அப்படிப்பட்ட பிள்ளைகளுக்குப் பெற்றோர்களே படிப்புச் சொல்லிக் கொடுப்பதோ அல்லது வேலையில் பயிற்றுவிப்பதோ நன்மை தரும் என்று நான் கருதுகிறேன். இக்கல்வித் திட்டமானது 1 முதல் 5 வகுப்புகள் மட்டும் தான் அமுலிலிருந்து வருகிறது. கிராமத்திலுள்ள உயர்தர ஆரம்பப் பாடசாலைகளிலுள்ள 1 முதல் 8 வகுப்புகள் முடிய இத்திட்டம் அமுலுக்கு வர சர்க்கார் முன் வர வேண்டும். ஏனென்றால் 5 வகுப்புக்கு மேலுள்ள பிள்ளைகளினால் பெற்றோர்களுக்கு மேலும் சௌகரியமாயிருக்கும்.

மேலும் பாடசாலையில் காலையில் வந்தவன் மறுநாள் மாலையில் வரவேண்டும். மறுநாள் மாலையில் வருபவன் அதற்கு மறுநாள் காலையில் வரவேண்டும் எனத் திட்டத்தில் இருக்கிறது. இதனால் பிள்ளைகள் அவர்கள் வீட்டில் நிரந்தரமாக ஒரு வேலையைச் செய்ய முடியவில்லை. அதனால் பள்ளிக்கூடம் போகும் நேரத்தையும் மறந்து விடுகிறான். ஆகையால் வகுப்பை இரு பிரிவாகப் பிரித்து 1 பிரிவு 15 நாட்கள் வரையில் காலையிலும், மற்றொரு பிரிவு 15 நாட்கள் வரையில் மாலையிலும் இம்மாதிரியே 15 நாட்கள் ஆனவுடன் காலையில் வந்தவர்கள் மாலையிலும் மாலையில் வந்தவர்கள் காலையிலும் (15 நாட்கள்) வருவதற்கு உத்தரவளித்தால் தொழிலில் பிள்ளைகள் முன்னேற வழியுண்டு. பள்ளி நேரத்தையும் காலை எட்டு மணிக்குள் ஆரம்பித்தால் பிள்ளைகள் மனத்தில் பாடம் நன்கு பதியும்.

களப்பாள் எஸ். கே. சாமி.
20—7—53 ஆசிரியர்

●

சென்ற 20-7-53-ந்தேதி திங்கள் கிழமையன்று, ஒரு கூட்டத்தினர் புதிய கல்வித் திட்டத்தை எதிர்த்து ஓர் மறியலை ஏற்பாடு செய்தனர்

அவர்கள் மறியலைச் செயலற்றதாக்க நாமும் முயற்சி எடுத்துக் கொண்டோம். அதாவது, படிக்க வசதியற்ற ஏழை மாணவர்களுக்குப் புஸ்தகம் முதலியன வாங்கிக் கொடுத்துப் பெரும்பாலான பள்ளிகளில் சேர்த்திருக்கிறோம். மறியல் நடந்த தினத்தன்று மாத்திரம் சுமார் 40 மாணவர்கள் புதிதாகச் சேர்த்திருக்கிறார்கள். நாங்கள் கொண்டு போய்ச் சேர்த்ததைவிடப் பலர் தனிப்பட்ட முறையிலும் சேர்த்திருக்கிறார்கள்..

தவிர, மறியலினால் பொது மக்கள் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்பாமல் இல்லை. எதிர்க்கும் கூட்டத்தில் சம்பந்தப்பட்டவர்களின் குழந்தைகளைத் தவிர, மற்றெல்லோரும் பள்ளிகளுக்குச் சென்றிருக்கின்றனர். ஏறக்குறையத் தொண்ணூறு பங்கு ஆஜராகி இருக்கிறது எல்லாப் பள்ளிகளிலும். இதற்கு ஆதார பூர்வமாக அந்தந்தப் பள்ளித் தலைமை ஆசிரியர்களிடமிருந்து ரிகார்டு வாங்கி வைத்திருக்கிறோம். பொது மக்களும் எங்களுடைய முயற்சியை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றிருக்கிறார்கள்.

குமாரபாளையம்
20—7—53 ராமச்சந்திரன்
(இளைஞர் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி)

# தீர்க்க தரிசனம்



பா. தண்டபாணி

ஆற்றின் மணல் பரப்பின் மேல் அமர்ந்திருந்தான் ஆதித்தன். அவன் உள்ளத்திலே சோகப்புயல் வீசிக் கொண்டிருந்தது. அன்று அமாவாசை ஆற்றுப் பிரதேசத்தை இருட்டு கவ்வியிருந்தது. "உய்" என்று பேய்க் காற்று வேறு அடித்துக் கொண்டிருந்தது.

தனிமையாக அமர்ந்திருக்கும் ஆதித்தனுக்கு இவற்றைப் பற்றிக் கவலை இல்லை. அவன் கண்களிலே நீர் மல்கியது. அதைத் துடைக்க வேண்டும் என்ற எண்ணமே எழவில்லை அவன் உள்ளத்தில்.

தன்னைப் பெற்று வளர்த்த அன்னை இறந்தபின் உலகம் அவனுக்கு வெறுத்து விட்டது. உண்ண உணவின்றிப் பட்டினியாய்க் கிடந்த நாட்கள் பல. அப்பொழுது உலகம் அவனைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை. அவன் தனக்காகச் சிறிதும் கவலைப்படவில்லை. தன்னைப் பெற்று வளர்த்த அன்புத் தாய் தன்னுடன் வாடுவது கண்டு மனம் கலங்கினான். பெற்ற உடனே தந்தையைப் பறி கொடுத்தவன், வாலிபனான பின்னும் தாயைக் காப்பாற்ற முடியாத கயவன்-இந்த எண்ணங்கள் பல முறை அவன் உள்ளத்திலே போரிட்டதுண்டு. அப்பொழுதெல்லாம் அவன் ஒரு முடிவுக்கு வருவான். அவன் முடிவு பயங்கரமானது. அவன் முடிவு தற்கொலை.

தற்கொலை புரிந்து கொள்ள எத்தனையோ தடவை கயிற்றைக் கழுத்தில் சுருக்கியதுண்டு. ஆனால் கயிறு கழுத்தை இறுக்குமுன் தன் தாயின் அன்புருவம் அவன் கண்முன் தோன்றும். அன்னையின் பாசம் அவன் முடிவைத் தகர்த்தெறியச் செய்யும். அவனை அறியாமலேயே அவன் கைகள் கழுத்தினின்று கயிற்றைக் கழற்றிவிடும். கழற்றி விட்டுச் சிறு குழந்தை போல் தேம்பித் தேம்பி அழுவான். இது ஒரு தடவை, இரண்டு தடவை நடந்ததையல்ல. பலமுறை.

இன்றும் அந்த முடிவுக்கே வந்தான். ஆனால் முறைதான் வேறு. இரவில் தனி இடங்களில் பேய்கள் சுற்றுவதுண்டு. அந்த அகால வேளையில் அங்கு செல்லும் மனிதரை அப் பேய்கள் அறைந்துவிடும். இது அவன் பலர் வாயால் கேட்டது. ஏன் தான் அந்தப் பேய்க்குப் பலியாகக் கூடாது? இப்படி ஒரு கேள்வி எழுந்தது அவனுடைய உள்ளத்தில்.

அவன் எழுந்து அந்தக் கும்மிருட்டுக்குள் நடந்தான். அவன் ஏதோ ஒரு யந்திரம் போல் சென்றான். அவன் மனசில் எவ்வித பயமுமில்லை. தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் நோக்கத்துடன் செல்பவன் பயப்பட முடியுமா? தன் அன்னை சென்ற உலகுக்குத் தானும் சென்றுவிடப் போகிறோம் என்பதில் அவன் மனம் சொல்ல முடியாத திருப்தி யடைந்தது.

அந்த இருட்டில், ஒரு உயரமான உருவம் ஆதித்தனை நோக்கி வந்து கொண்டிருந்தது. ஆதித்தன் அதை நன்றாய்ப் பார்த்தான். அந்த உருவம் பேய்தானோ? அவன் உள்ளத்தில் சிறிது கலக்கம் ஏற்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக ஆதித்தனை நெருங்கி விட்டது. "ஐயோ அம்மா!" ஆதித்தனின் அடிவயிற்றினின்று இந்த அலறல் எழுந்தது. அப்படியே தரையில் சாய்ந்து விட்டான்.

*   *   *

ஆற்றின் மறு கரையில் ஒரு ஆசிரமம் இருந்தது. அதிலே ஒரு முனிவரும் பல சிஷ்யர்களும் இருந்தனர். சூரியனின் கிரணம் ஆசிரமத்தின் ஜன்னல் வழியாகக் கட்டிலில் படுத்திருந்த ஆதித்தன் மேல் "சுரீர்" என்று அடித்தது. ஆதித்தன் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தான். அவனுக்குத் தான் எங்கிருக்கிறோம் எப்படி வந்தோம் என்றே புரியவில்லை. 'சட்'டென்று முன்னிரவு ஆற்றங் கரையில் நடந்த நிகழ்ச்சிகள் அவன் கவனத்திற்கு வந்தன.

"கலக்கம் வேண்டாம். இது உன் இல்லம்" என்று கூறிக் கொண்டே முனிவர் உள்ளே நுழைந்தார். முன்தினம் ஆற்றங்கரையில் பார்த்த உருவத்தின் சாயல் இருந்தது அவரிடம். ஆதித்தன் விஷயத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்டான்.

ஆதித்தன் நல்ல நிலை பெறப் பல நாட்கள் பிடித்தன. அந்தப் பல நாட்களில் அவன் வாழ்வு கவலையற்று இருந்தது. எவ்வளவு நாள் அவனால் அங்கே இருக்க முடியும்? முனிவருக்கு இடைஞ்சல் ஏற்படாமல் தானே ஆசிரமத்தை விட்டுச் சென்றுவிட எண்ணினான். ஆசிரமத்தை விட்டுச் சென்றால் ஆசிரமத்தின் அமைதி தரும் வாழ்வு வெளி உலகில் கிடைக்குமா? அவன் உள்ளத்தில் பல

எண்ணங்கள் தோன்றின. இவற்றிற்கு ஒரு முடிவு காண விழைந்தான்.

ஒரு நாள் அவன் முனிவரிடம், "சுவாமி, எனக்கு ஏனோ உலகத்தைக் கண்டாலே ஒரு வெறுப்பு உண்டாகிறது. உலகம், உலக பந்தம் இவைகளைக் கண்டாலே என் உள்ளம் நடுங்குகிறது. நானும் தங்கள் சீடர்களில் ஒருவனாக வேண்டும் என்று விரும்புகிறேன். தாங்கள் தயை கூர்ந்து என் விருப்பத்தை நிறைவேற்றி வையுங்கள்" என்றான்.

"ஆதித்தா, துறவறம் அவ்வளவு எளிதானதல்ல. இன்று ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சிக்கோ, ஏற்படும் என நினைக்கும் நிகழ்ச்சிகளுக்கோ அஞ்சித் துறவறம் பூணல் அழகன்று. துறவறம் பூண உறுதி படைத்த உள்ளம் வேண்டும். அந்த உறுதி இல்லா உள்ளத்துடன் துறவறம் பூணல் மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கிய கதையாக முடியும்" என்றார் முனிவர்.

"என் உறுதியைச் சந்தேகிக்கிறீர்களா, சுவாமி?" என்று கேட்டான் ஆதித்தன்.

"ஆதித்தா, கொஞ்ச காலம் பொறுத்திரு."

அன்று அமாவாசை. உலகமே இருளால் கவ்வப்பட்டிருந்தது. வானில் விண் மீன்கள் மின்னிக் கொண்டிருந்தன.

"ஆதித்தா!"

"சுவாமி!"

"என்னுடன் வா."

ஆற்றின் நடுவில் மணற் பரப்பின்மேல் இருவரும் இருந்தனர். கோடைகால மாதலால் ஆற்றிலே நீரே இல்லை. குடி ஜலத்திற்காக ஆற்றின் நடுவில் ஒரு வாய்க்கால் தோண்டப்பட்டிருந்தது.

"ஆதித்தா, இந்த ஆற்று மணற் பரப்பு, இவ் விருட்டு, இந்த வாய்க்கால், அந்தச் சுடுகாடு, வானத்து நட்சத்திரங்கள் இவைகளினின்றும் உன்னால் ஏதாவது யூகிக்க முடிகிறதா?" என்று கேட்டார்.

"இந்த ஆற்று மணலில் இந்தப் பரந்த உலகைக் காண்கிறேன். இந்த இருட்டு, உலகைக் கவ்வியிருக்கும் மாயை. இந்த வாய்க்கால், வாழ்வு காட்டாற்று வெள்ளம் என்பதைக் காட்டுகிறது. சுடுகாடு இந்த அறிவிப்பை அலட்சியம் செய்தவர்களின் நிலையைக் காண்பிக்கிறது. இந்த விண் மீன்களின் கண் இமைப்பு இந்த அவலவாழ்வை எண்ணி எள்ளி நகைப்பது போல் உள்ளது!"

"ஆதித்தா," முனிவர் முகத்தில் மலர்ச்சி அரும்பியது. "இது என் பரிசோதனையின் முதற் கட்டம். இதிலே வெற்றி பெற்று விட்டாய். நீ துறவறம் ஏற்கும் நாள் உன்னை நெருங்குகிறது. இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திரு!"

"தங்கள் சித்தம், சுவாமி!"

சில நாட்களுக்குப் பின், பௌர்ணமியன்று ஆதித்தனை அழைத்துக் கொண்டு அதே மணல் பரப்பை அடைந்தார் முனிவர்.

"ஆதித்தா, இந்த மணற் பரப்பு, இந்த வாய்க்கால், இந்தச் சுடுகாடு, வானத்து வெண்ணிலா இவைகள் இப்பொழுது உனக்கு எப்படித் தோன்றுகின்றனர்."

"சுவாமி, இந்த ஆற்று மணலும், வாய்க்காலும், சுடுகாடும் என் பழைய கருத்தையே ஸ்திரப்படுத்துகின்றன."

"ஆதித்தா!" முனிவர் முகத்தில் மகிழ்ச்சிக் குறிகள். "என் பரிசோதனை இரண்டிலும் வெற்றி கண்டு விட்டாயப்பா! இனி நீ துறவறம் ஏற்பதில்—என் சீடனாவதில் — தடை ஏதுமில்லை. அடுத்த பௌர்ணமியன்று நீ துறவறம் ஏற்கச் சடங்குகள் செய்யப்படும்."

ஆதித்தன் உள்ளத்தில் அமைதி நிலவியது.

பௌர்ணமி நெருங்கிக் கொண்டே இருந்தது. ஆதித்தனுக்குத் துறவறச் சடங்குக்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருந்தனர் முனிவரின் சீடர்கள்.

**ம**றுநாள் பௌர்ணமி. முனிவர் ஆதித்தன் வருகைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஊருக்குச் சாமான் வாங்கச் சென்றவன் இருட்டி இரண்டு நாழிகையாகியும் திரும்பவில்லை. முனிவர் உள்ளம் குழம்பியிருந்தது. முனிவரின் ஆவல் அதிகமா

## பிரபல திருமணம்

சேலம் டவுன், அருணாசல ஆசாரி தெருவில் ஜவுளி வியாபாரம் செய்யும் திரு. நா. மாரிமுத்து முதலியார் குமாரர் திரு. தங்கவேலு என்கிற T. V. ராஜேஸ்வர், M.A., I.P.S., (Asst. Superintendent of Police of Hyderabad) அவர்களுக்கும் திருச்செங்கோடு திரு. T. G. நடேச முதலியார் குமாரத்தி திருமதி மகாலக்ஷ்மிக்கும், விஜய வருடம் ஆனி மாதம் 11-ந் தேதி (25-6-53) சேலம் மணமகன் இல்லத்தில் திருமணம் வெகுசிறப்பாக நடைபெற்றது. அன்று மாலையில் ஸ்ரீமதி K. B. சுந்தராம்பாள் & பார்ட்டியாரால் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது.

மணமக்கள் பல்லாண்டு வாழ்க!



யிற்று. கொஞ்ச தூரத்தில் ஆதித்தன் வருவது தெரிந்தது. முனிவர் உள்ளத்தில் சிறிது ஆறுதல் ஏற்பட்டது.

"நல்ல பிள்ளையப்பா, இவ்வளவு நேரம் ஊரில் என்ன செய்து கொண்டிருந்தாய்? போய்ப் படு. நாளை விடிய இரண்டு நாழிகைக் கெல்லாம் எழுந்துவிட வேண்டும்" என்று கூறினார் முனிவர்.

ஆதித்தன் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

"ஆதித்தா!"

"சுவாமி?"

"ஏன் நிற்கிறாய், என்ன வேண்டும்?"

"ஒன்றுமில்லை, சுவாமி."

"தயங்காமல் கூறு."

"இன்று ஆற்று வழியாக வந்து கொண்டிருந்தேன்" என்று மெல்ல ஆரம்பித்தான்.

"ஊம்"

"வெண்ணிலவு தண்ணொளியை வீசிக் கொண்டிருந்தது..."

"விஷயத்தைக் கூறு."

"வேறொன்றுமில்லை. அது என் கருத்திற்கு......" ஆதித்தன் தயங்கினான்.

"சொல், சொல்! இன்று புதுமையான கருத்துடன் கண்டாயோ?" முனிவரின் உள்ளத்தில் ஆவல் அதிகமாயிற்று.



தஞ்சை, தென் ஆற்காடு ஜில்லாக்களை இணைக்கும் கொள்ளிடம் ஆற்றுப் பாலம் கட்டும் கண்ட்ராக்டரும், பர்மாஷெல் ஏஜண்டுமான ராவ்சாஹிப் கே. வீராசாமி நாயுடு அவர்கள் குமாரி சௌ. வத்ஸலாதேவிக்கும் கரூர் எஞ்சினியரிங் கண்ட்ராக்டரும் மண்டி வியாபாரியுமான ஸ்ரீ டி. கே. ராமசாமி நாயுடு அவர்களின் குமாரர் சிரஞ்சீவி ஆர். சுப்பையாவுக்கும் கரூரில் 1-7-53 அன்று விவாகம் சிறப்பாக நடந்தது. மறுநாள் தஞ்சாவூரில் மணமகள் இல்லத்தில் வரவேற்புவைபவம் விமரிசையாய் நடைபெற்றது

"ஆம் சுவாமி ஆனால்......"

"ஆனால் என்ன?"

"வேறு விதமாக......"

"என்ன?"

"ஆற்று மணல் பரப்பின் மூலம் அதே உலகத்தைத்தான் கண்டேன். ஆனால் அதன்மேல் நிலாவின் ஒளி படும்போது அது வேறு விதமாக உள்ளது. மணலும் அதன்மேல் நிலவின் தண்ணொளியும் தரையும் அதைத் தொடும் நீல வானமும், அதில் தவழும் வெண்ணிலவும் உலகில் ஆண் பெண் கைகோத்து இருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது. இதைக் கவனியாத மனிதன் துறவறத்தை இன்பம் தரும் காட்டாறு என எண்ணி ஓடுகிறான். அந்த இன்பம் கானல் நீராகிறது. முடிவிலே சுடுகாட்டிலே பிடி சாம்பலாகிறான். இருக்கும் இன்பத்தை அனுபவியாது எங்கோ இன்பம் இருப்பதாகச் சொல்லப்படும் இடத்திற்குச் செல்லத் துறவறத்தை மேற்கொள்ளுகிறான். இறுதியில் இரண்டும் அவனுக்குக் கிட்டுவதில்லை. ஆகவே துறவறத்தை விட இல்லறமே சிறந்தது என்ற எண்ணம் என் உள்ளத்தில் எழுகிறது!" என்றான்.

"ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா!" என்று முனிவர் சிரித்துவிட்டு, "இந் நிலைக்கு—இம் முடிவுக்கு நீ வரக் காரணம்?" என்று கேட்டார்.

"ஒரு பெண்!"

"என்ன?"

"ஆம் சுவாமி! இன்று ஊரில் சாமான் வாங்கிக் கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு பெண்ணைச் சந்தித்தேன். அவள் எனக்கு அறிமுகம் ஆனவள்தான். என் தாயாருக்கு அவளிடம் அளவுகடந்த பிரியம். சில காலமாக அவள் தன் மாமாவின் வீட்டுக்குப் போயிருந்தாள். இப்பொழுது என்னைக் கண்டதும் அவள் முகத்தில் உண்டான குதூகலத்தைச் சொல்லி முடியாது. ஆனால் மறுகணம் அது கண்ணீராக மாறியது. என் தாயாரின் மரணம் அவளுக்கு அளவு கடந்த துக்கத்தைத் தந்தது. சுவாமி, அவளுக்கு என்னை......"

"...விட்டால் வேறு கதியில்லை. அப்படித்தானே?" என்று கேட்டு விட்டு முனிவர் சிரித்தார். பிறகு அவர், "ஆதித்தா, இப்பொழுது துறவறத்தைப் பற்றி உன் மனம் என்ன நினைக்கிறது?" என்றார்.

"......சுவாமி......!"

"ஆதித்தா, கலங்காதே! இந்த நிலைமையை நான் முன்னமே எதிர் பார்த்துத்தான் உன்னைப் பொறுத்திருக்கும்படி சொன்னேன். போ, உன்னை நம்பியிருக்கும் அவளை மணந்து கொண்டு சந்தோஷமாயிரு!" என்று அவனுக்கு முனிவர் அன்போடு ஆசிகூறினார்.

அவரை வணங்கி நின்ற ஆதித்தனின் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகியது.

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும் வாசனையுடனும் இருக்க, உயர்ந்த, புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட் பவுடர். மென்மையும், நறுமணமும் சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும் வெப்பத்தில் குளுமையும் இனிமையும் தருகிறது.

ஸ்நானத்துக்குப் பின் வாசனைப் பூஷணம். ஈரத்தை உறிஞ்சி புதுமை தருகிறது.

குளுமை! குதூகலம்! கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை! யும்-குழந்தைக்கு ஏற்றது.

மிக எடுப்பானது உங்கள் வதனத்தை அழகு படுத்தும் பவுடர்.




## புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்




**ஆர். எஸ். ஞானம்பாள்**

ரங்கனும் ராஜுவும் செய்வதறியாது திகைத்தனர். அவர்கள் 'தாயார் ஒன்றரை வருஷமாக யமனோடு போராடிக் கொண்டிருந்தாள். கொஞ்ச நஞ்சம் இருந்த பணம் வைத்தியத்தில் செலவழிந்து விட்டது. ரங்கன் ராஜு இருவரும் சிறுவர்கள். ரங்கன் பி. ஏ. ஆனர்ஸுக்கு இரண்டாவது வருஷம் படித்துக் கொண்டிருந்தான். ராஜு ஒன்பதாவது படித்துக் கொண்டிருந்தான். பையன்கள் இருவரையும் நன்றாகப் படிக்க வைக்கவேண்டும் என்று இருந்த நகை நட்டுகளை எல்லாம் விற்றுச் செலவழித்தாள் தாயார். ரங்கன் ஆனர்ஸ் பாஸ் செய்து ஒருவேலை தேடிக் கொண்டு விட்டால் ராஜுவைப் படிக்க வைத்துவிடுவான் என்ற எண்ணம்.

கையில் இருந்த பணமும் தீர்ந்து விற்கக் கூடியதை எல்லாம் விற்றாயிற்று. நோய் குணமான பாடில்லை. 'பணம் இல்லாததால் ரங்கன் படிப்பைப் பாதியில் நிறுத்தி விடுவானோ! இதுவரை படித்ததும் வீணாகி விடுமே! திடமாக இருந்தாலாவது நாலு வீட்டில் வேலைசெய்து சம்பாதித்துத் தரலாமே!' என்று உருகினாள் தாயார்.

ராஜு சிறுவனானாலும் புத்திசாலி. அம்மாவின் வருத்தம் அவனுக்குத் தெரிந்துதானிருந்தது. அதைத் தீர்க்க அவனிடம் சக்தி ஏது?

கஞ்சியை ஆற்றிக் கொண்டிருந்த ராஜுவுக்குச் சட்டென்று ஒரு யோசனை உதயமாயிற்று. "அம்மா! அம்மா!" என்றான். தாயாரால் பேச முடியவில்லை. நினைவு மட்டும் இருந்தது. ஏன் என்று கேட்கும் பாவனையில் கண்களைத் திறந்து பார்த்தாள்.

"அம்மா! நீ கவலைப்படாதே! நீ படுக்கையில் படுத்ததிலிருந்து நான் சமையல் செய்வதால் இப்பொழுது எனக்கு நன்றாகச் சமைக்க வந்துவிட்டது. எனவே, நான் ஒரு ஓட்டலில் சேர்ந்து கொள்கிறேன். ஓட்டலிலேயே சாப்பாடு கிடைத்து விடும். கிடைக்கும் சம்பளத்தை அண்ணாவின் செலவுக்கு எடுத்துக் கொள்ளலாம். எப்படியாவது கஷ்டப்பட்டு இரண்டு வருஷத்தையும் ஓட்டி விட்டால் அண்ணா வேலை தேடிக் கொண்டதும் என்னைப் படிக்க வைத்து விடுவான். ஆகவே, விசாரத்தை விடு!" என்றான்.

தாயாரின் கண்களிலிருந்து பெருகும் நீர் கன்னங்களில் வழிந்தது. வாய்திறந்து பேச முடியாமல், 'பாவம், குழந்தை! சாகப் போகிற எனக்கு ஆறுதலாகப் பேசுவதே பெரிது. அவனால் என்ன செய்ய முடியும்?

தெய்வம் விட்ட வழி விடட்டும்!' என்ற எண்ணத்துடனே என்றென் றைக்கும் கண்களை மூடினான்.

"ராஜு, நான் படிப்பை நிறுத்தி விட்டு எங்கேயாவது வேலை தேடிக் கொள்கிறேன். நான் படித்தது போதும். நீ படி!" என்றான் ரங்கன்.





"இல்லை அண்ணா! நீ எப்படியாவது இந்தப் படிப்பை முடித்துவிடு. அப்புறம் கவலையில்லை. என் படிப்பு இரண்டு வருஷம் நிற்பதால் ஒன்றும் குடிமுழுகி விடாது. பள்ளிக்கூடத்தை விட்டு விட்டு உன் படிப்பு முடியும் வரையில் ஓட்டலில் சேர்ந்து வேலை செய்கிறேன்" என்றான் ராஜு.

"நீயோ குழந்தைப் பையன். நீ என்ன வேலை செய்ய முடியும்? அடுப்படியில் மணிக்கணக்கில் உன்னால் இருக்க முடியுமா? இரண்டு வருஷத்தில் எல்லாம் மறந்து விடுமே! நீ அடுப்படியில் வெந்து நான் படிப்பதா? வேண்டாம்!" என்றான் அண்ணன்.

"நான் படிப்பை மறக்க மாட்டேன், அண்ணா! ஓய்வு நேரத்தில் படிக்கிறேன். நீயும் சொல்லிக் கொடு. இந்த இரண்டு வருஷமும் நீ படித்து உனக்கு நல்ல வேலை யும் கிடைத்து விட்டால் அப்புறம் இருவ ருமே கஷ்டப் படாமல் இருக்கலாம்" என்று ஒரே பிடிவாதமாகக் கூறித் தன் ஏற் பாட்டிற்கு அண்ணனைச் சம்மதிக்க வைத்து விட்டான் ராஜு.

சிறுவன் ராஜுவை வேலையில் வைத்துக் கொள்ள யாரும் காத்திருக்கவில்லை. பல கடைகளில் ஏறி இறங்கிய பின் ஒரு ஏழை ஓட்டல் முதலாளி ராஜுவை ஏற்றுக் கொண்டார். அவர் பொருளாதார நிலை ராஜுவுக்குச் சம்பளம் என்று எதுவும் கொடுக்கக் கூடிய நிலை மையில் இல்லை. எனவே, ரங்க னுக்கும் சாப்பாடு போட்டு விடுவதாகக் கூறினார். சகோ தரர்கள் இருவரும் பரம திருப்தி யுடன் ஒப்புக் கொண்டனர்.

ராஜு சேர்ந்த ஓட்டல் ஒரு பொட்டல் காட்டில் இருந்தது. வியாபாரம் அதி கம் இல்லை. வழி மேல் செல்லும் இரண்டு பஸ் கள் அரை மணி நேரம் அங்கே நிற்கும். அப் பொழுது நடக்கும் வியாபாரம்தான். ராஜு வந்த நேரம் கடைக்கு எதிரில் ஒரு பெரிய மில் கட்ட ஏற்பாடாயிற்று. தொழிலாளர்கள் நிறைய ஓட்டலுக்கு வர ஆரம்பித்தனர். ராஜு வியாபார நுணுக்கங்கள் தெரிந்த வனாக இருந்தான். வருபவர்களைச் சிரித்த முகத்துடன் பரிவாக வரவேற்று உபசரிப் பான். சுறு சுறுப்பு நிறைந்த ராஜுவைக் கண்டாலே வாடிக்கைக் காரர்களுக்கு ஒரு திருப்தி. நாலணாவுக்குச் சாப்பிட நினைத்து வருபவர்கள், ராஜுவின் உபசரிப்பால் எட்

டணுவுக்குச் சாப்பிட்டு விடுவார்கள். வியாபாரம் நாளுக்கு நாள் பெருகிற்று.

சிறு வயதிலேயே பொறுப்புடன் வேலை செய்யும் ராஜூமீது முதலாளிக்குத் தனி அபிமானம் உண்டு. அவன்மீது இரக்கம் கொண்டு அவ்வப்போது பண உதவியும் செய்து வந்தார். ரங்கனும் காலேஜ் போன நேரம், படித்த நேரம் போகக் கடைக்கு வந்து தம்பிக்கு உதவியாக வேலை செய்வான். ராஜூவுக்கு இரவு பத்து மணி வரை வேலை சரியாக இருக்கும். எத்தனை களைத்து வந்தாலும் ஒரு மணி நேரம் பாடம் படிக்கத் தவறவே மாட்டான்.

காலம் எதற்கும் நிற்பதில்லை. ஆனர்ஸ் பாஸ் செய்துவிட்ட ரங்கன் சந்தோஷத்தால் நிலை கொள்ளாமல் குதித்தான். ராஜூவுக்கும் மட்டில்லாத மகிழ்ச்சிதான். ஆனாலும் அம்மா இருந்து பார்க்கவில்லையே என்ற குறை சுமையாக அழுத்தியது.

பள்ளிக்கூடம் திறந்ததும் சேரலாம் என்றால் ரங்கனுக்குச் சட்டென்று வேலை கிடைக்கவில்லை. வேறு வேலை கிடைக்கும் வரை ஓட்டலில் தன் ஸ்தானத்தில் வேலை செய்யும்படி கூறினான் ராஜூ.

ஆனர்ஸ் படித்த ரங்கனுக்குக் கோபம் வந்துவிட்டது. "ச்சீ! உளறாதே. இன்னும் நாலு மாசத்தில் கலெக்டர் பரீட்சைக்கு எழுதப்போகிறேன். நான் ஓட்டல் சிப்பந்தியாக இருந்தால் ஊரார் சிரிப்பார்கள். எனவே, இன்னும் நாலைந்து மாதம் நீ பள்ளிக்கூடம் சேர முடியாது" என்றான்.

"அப்புறம் வருஷ மத்தியில் எப்படி அண்ணா, நான் பள்ளியில் சேர முடியும்?" என்று கேட்டான் ராஜூ.

"அதனால் என்னடா? அடுத்த வருஷம் சேர்ந்தால் போச்சு. ஜோராக ஹாஸ்டலில் சேர்த்து விடுகிறேன்" என்றான்.

"உனக்குக் கலெக்டர் வேலை ஆகா விட்டாலோ......"

"போடா, அபசகுனமே! எம். ஏ. பாஸ் செய்துவிட்டு ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுதப் போகிறவன் ஓட்டலில் வேலை செய்தால் அழகுதான். கலெக்டர் ஆனால் நாளைக்கு நல்ல மதிப்பு இருக்கும்" என்றான் ரங்கன்.

அப்பொழுது அங்கே முதலாளி வரவே அவர்கள் பேச்சுப் பாதியில் நின்றது.

விடிந்தால் பரீட்சைக்குப் பணம் கட்டக் கடைசி நாள். ரங்கன் தன்னிடம் இருந்த புஸ்தகங்களில் சிலவற்றை விற்றதில் முப்பது ரூபாய் கிடைத்தது. மீதிப் பணத்திற்கு என்ன செய்வது? ராஜூ கேட்டால் முதலாளி மறுக்க மாட்டார். ஆனால் அவன் வாங்கித் தருவானா? ராஜூ வரும்வரை ரங்கன் விழித்துக் கொண்டு காத்திருந்தான்.

"அண்ணா! அண்ணா!! உட்கார்ந்து கொண்டே தூங்குகிறாயே! இந்தா, நூறு ரூபாய்" என்றான் ராஜூ.

"ஏது? முதலாளி கொடுத்தாரா, என்ன அவர் ஒன்றும் சொல்லவில்லையா?"

"முதலில் கொஞ்சம் யோசனை செய்தார். இன்னும் இரண்டு வருஷத்திற்கு அவரை விட்டு எங்கும் போவதில்லை என்று எழுதிக் கொடுப்பதாக நான் சொன்னேன். உடனே மனம் மாறி அவர் அதெல்லாம் ஒன்றும் வேண்டாமென்று சொல்லி ரூபாய் கொடுத்தார். இந்தா, பரீட்சைக்குப் பணம் கட்டிவிடு" என்றான் ராஜூ.

மாதாகோயில் கடிகாரத்தில் மணி பதினொன்று அடித்தது. "நாளைக்குப் படிக்கலாம், ராஜூ! நேரமாகிவிட்டது. படுத்துக்கொள்" என்று போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டான் ரங்கன். ராஜூ பதில் பேசாமல் புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டான். இரவு ஒரு மணி வரை படித்துக் கொண்டிருந்த ராஜூ அப்படியே புஸ்தகத்தின் மீதே கவிழ்ந்து படுத்துத் தூங்கிப் போய் விட்டான்.

ரங்கன் பரீட்சை எழுதி விட்டான். அதற்குள் நாலு பையன்களுக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்துத் தனக்கு வேண்டிய டிரஸ்களெல்லாம் தைத்துக் கொண்டான். இதுவரை காணாதிருந்த உறவினர்கள் ஒருவர் பின் ஒருவராகச் சொந்தம் பாராட்டிக் கொண்டு வந்தனர். ஜாதகமே இல்லாத ரங்கனுக்குத் தங்கள் தங்கள் பெண்களின் ஜாதகம் பொருந்தியிருப்பதாகக் கூறினர். ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை என்றதும் முன்பின் தெரியாத உத்தியோகஸ்தர்களும் வரதட்சணையுடன் போட்டியிட்டனர். எல்லோரையும் விடச் சாமர்த்தியசாலியான ஒருவர் காலணா செலவில்லாமல், தம் பெண்ணைக் கொண்டே காரியத்தை முடித்துக் கொண்டார்.

மதுரம் ரங்கனுக்கு மதுரமாக இருந்தாள். அவள் அழகு அவனைக் கவர்ந்தது. அவன் அவளைக் காதலித்தான். கல்யாணம் நடந்தது. பிக்குப் பிடுங்கு இல்லாத புக்ககத்தில் மதுரம் சம்சாரம் செய்ய வந்து விட்டாள். ஓரிரு மாதங்கள் வரை மன்னி மதுரம் ராஜூவிடம் மதிப்பும் மரியாதையுமாகத்தான் இருந்தாள். அப்புறம் ஒரு நாளைப்போல் பதினொரு மணிக்கு வரும் ராஜூவுக்குக் கதவு திறப்பது அவளுக்குத் தொல்லையாக இருந்தது. அதிலும் 'உன் மைத்துனர் இன்ன ஓட்டலில் சர்வராமே?' என்று சிநேகிதிகள் கேட்கும்பொழுது அவளுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போலிருந்தது. போதாக்குறைக்கு அவள் கணவன் சம்பாதித்துத் தம்பியைப் படிக்க வைக்க வேண்டும் என்ற யோசனை அவளுக்கு வேம்பாகக் கசந்தது.

"நீங்கள் ஏன் உங்கள் தம்பி சம்பாதித்துச் சாப்பிட வேண்டும்? அதில் என்னையும் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்? உங்கள் தம்பியின் அதிகாரமும் அக்கிரமமும்" என்று

மதுரம் முகத்தை முந்தானையினால் மூடிக் கொண்டு விசும்பினாள்.

"ஏன்? அவன் என்ன செய்தான்? சொல்லு, மதுரம்! அழாதே! நீ அழுதால் எனக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது, தெரியுமா?" என்றான் ரங்கன்.

"'படித்து என்ன பிரயோஜனம்? பெண்டாட்டிக்குச் சோறு போடக் கையாலாகாதவனுக்குக் கல்யாணம் ஒரு கேடா?' என்று என் காது கேட்கச் சொல்லுகிறார். என்னைச் சொன்னாலும் பொறுத்துக் கொள்வேன். உங்களைச் சொல்லும் பொழுது உயிரையே விட்டு விடலாமென்று தோன்றுகிறது" என்று கூறி மதுரம் 'ஹோ'வென்று அழுதாள்.

"அசடு! அப்படியெல்லாம் சொல்லாதே. திமிர் பிடித்த பயல் அப்படியா சொன்னான்? அவன் கொடுக்கும் மான்யத்தை நிறுத்திக் கொள்ளட்டும். நான் நாளைக்கே ஒரு ஆசிரியர் வேலை பார்த்துக் கொள்கிறேன். கலெக்டர் வேலைக்கு ஆர்டர் வந்ததும் அதை விட்டு விடலாம். அழாதே, மதுரம்!" என்று ஆறுதல் கூறினான் ரங்கன்.

அன்றிரவானாலும் சண்டை பிடித்துத் தம்பியை விரட்டிவிட எண்ணிக் காத்துக் கொண்டிருந்தான் ரங்கன். ராஜு அன்றைக்கு வீட்டுக்கு வரவே இல்லை. ரங்கனுக்கு அது சிறிது வியப்பாகவே இருந்தது.

மறு நாள் ராஜு சோர்ந்து போய் வீடு வந்தான். அவனுக்கு ஜுரம் வந்திருந்தது. ரங்கன் வீட்டில் இல்லை. மதுரம், "உங்கள் அண்ணா இல்லாமல் நான் தனியாக இருக்கும் பொழுது உங்களுக்கு இங்கென்ன வேலை?" என்று தாறுமாறாகச் சத்தம் போட்டாள். ராஜு திடுக்கிட்டான், ஒன்றும் புரியாமல்.

"மன்னி என்ன சொல்கிறீர்கள்? எனக்குக் காய்ச்சல் வந்திருக்கிறது" என்று கூறியவாறே ராஜு படுக்கையை விரித்தான்.

"அதென்னவோ எனக்குத் தெரியாது. உங்களுக்கும் எங்களுக்கும் இனிமேல் சரிப்படாது. நீங்கள் தனியாகப் போய்விடுங்கள். நாங்களே கஷ்டப்படுகிறோம். அதில் நீங்களும்......" என்று இழுத்தாள் மதுரம்.

ராஜுவுக்கு ஜுர வேகத்துடன் கோப வெறியும் சேர்ந்து விட்டது.

"என்னைக் கேட்க நீ யார்? எங்கள் அண்ணன் தம்பிகளுக்குள் சண்டை மூட்ட வந்திருக்கிறாயோ? உன் அப்பன் வீட்டு மஞ்சள் காணியில் நாங்கள் சாப்பிடவில்லை" என்று கத்த ஆரம்பித்து விட்டான்.

கலெக்டர் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களில் தன் பெயர் இல்லாததைக் கண்டு கோபமும், துக்கமும் வாட்டி வதைக்க வீடு சேர்ந்தான் ரங்கன். அவனைக் கண்டதும் மதுரம் கண்ணீர் விட்டுக்கொண்டு கதறியபடி ஓடி வந்தாள். ராஜுவின் பேச்சைக் கேட்ட ரங்கன் எதுவும் விசாரிக்காமல், எல்லா எரிச்சலையும் சேர்த்துத் தன் முழு பலத்துடன் ராஜுவின் கன்னத்தில் பட்பட்டென்று பத்தறை அறைந்தான். 'ஐயோ' என்று கன்னத்தைத் தடவியபடி கீழே உட்கார்ந்து விட்டான் ராஜு. அவனால் பேசக் கூட முடியவில்லை.

"வெளியே போடா, நாயே! இந்தப் பக்கம் இனிமேல் வராதே! எழுத்து வாசனை இருந்தால் இப்படிப் பேசுவாயா? மரியாதை தெரியாத கழுதை! தொழிலுக்குத் தகுந்த அற்பப் புத்திதானே இருக்கும்!" என்று பொழிந்து தள்ளினான் ரங்கன்.

ஆவேசம் வந்தவன்போல் வேகமாக எழுந்த ராஜு, "போதும், நிறுத்து அண்ணா! நீ ரொம்பப் படித்தவன். கூடப் பிறந்த பாசத்தைக் கூடப் போக்கடிக்கும் உன் படிப்பு எனக்கு வேண்டியதில்லை. நீ என்னைப் படிக்க வைத்து ஆதரிப்பாய் என்ற கனவையும் இன்றுடன் மறந்தேன். உன் படிப்பு உனக்கும், உன் படித்த மனைவிக்கும் சோறு போட்டால் போதும். என் கைகள் எனக்குச் சோறு போடும்" என்று கூறிவிட்டுத் தள்ளாடிக் கொண்டே வெளியே சென்றான்.

"ராஜு! ராஜு!! ஏன் வந்து விட்டாய்? காய்ச்சல் விட்டு விட்டதா?" என்று கேட்டார் ஓட்டல் முதலாளி.

"காய்ச்சல் விடவில்லை, சார்! எனக்கு உலகில் இருந்த ஒரே பந்துவான சகோதரன் என்னை விட்டு விட்டான். பெரிய படிப்புப் படித்த அண்ணாவுக்கு என் தொழில் அல்ப புத்தி தரும் தொழிலாகி விட்டதாம். ஓட்டல் தொழில், என்னை மரியாதை தெரியாத கழுதையாக்கி விட்டதாம்" அதைச் சொல்லிய ராஜு விம்மி விம்மி அழுதான்.

"கிடக்கிறான், சின்னப் பயல்! ஆரம்பத்திலிருந்தே அவன் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. தேகத்தில் மண்படாது சுகப்பட வேண்டும் என்ற எண்ணமுள்ளவன். நீ அவனுக்கு மதிப்பற்ற உதவி செய்தாய். அதை மறந்து விட்டுக் கண்டபடி பேசிவிட்டான். அழாதே, ராஜு! நான் இதை எல்லாம் ஒருவாறு எதிர்பார்த்துத்தான் சம்பளம் என்று உன் கையில் கொடுக்கவே இல்லை. உன் கணக்கில் மாசாமாசம் சம்பளத்தைப் பாங்கியில் போட்டு வைத்திருக்கிறேன். போனது போகட்டும். படுத்துக் கொள். உடம்பு குணமானதும் மேற்கொண்டு பார்க்கலாம்" என்று ஆறுதல் கூறித் தைரியப் படுத்தினார் முதலாளி.

உடம்பு குணமானதும் தம் பெண்ணை ராஜுவுக்கே கல்யாணம் செய்து கொடுத்துத் தனியாக ஒரு கடையும் வைத்துக் கொடுத்தார் ராஜுவின் மாஜி முதலாளியாகி விட்ட அவன் மாமனார்.

'ராஜ்பவன்' இன்று நகரிலேயே சிறந்த ஓட்டல். தினம் ஆயிரக்கணக்கில் விற்பனையாகிறது. லட்சாதிபதியானாலும் முதலாளி ராஜு சிப்பந்திகளோடு தானும் ஒரு சிப்பந்தி

யாக வருபவர்களைக் கவனித்து உபசரிப்பதில் பின் வாங்குவதே இல்லை.

இருமுறை கலெக்டர் பரீட்சையில் தோற்றுவிட்ட ரங்கன் பயிற்சியில்லாத ஆசிரியராகவே இருந்தான். குடும்பமும் பெருகிவிட்டது. கலெக்டர் ஆகாத மாப்பிள்ளைக்குப் பண உதவி செய்ய மாமனாரும் முன் வரவில்லை.

மைத்துனர் தான் பெரிய பணக்காரராக இருக்கிறாரே, அவரிடம் சென்று உதவி பெற்றால் என்ன என்று நினைத்தாள் மதுரம், முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மறந்து மூட்டை கட்டி வைத்துவிட்டு. ராகவனுக்கு அது இஷ்டமில்லை. தான் விரட்டி விட்ட தம்பியிடம் உதவி பெற அவனுக்கு வெட்கமாக இருந்தது.

ஆனால்......

ஒரு நாள் காலை ரங்கனுக்கு ஒரு தபால் வந்தது. அதில் ஆயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கும் ஒரு சிறு கடிதமும் இருந்தன.

"படிப்பைக் காட்டிலும் உழைப்புக்குத்தான் பெருமை அதிகம். உழைப்பும் படிப்பும் சேர்ந்தால் வாழ்க்கை பொன்னுக்கு மணம் ஏற்றியது போலப் பரிமளிக்கும். போதனா முறை ஆசிரியராக ஆகிவிட்ட தங்களுக்கு இதை நான் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. வருங்கால சந்ததிகளுக்கு உழைப்பின் பெருமையைப் புகட்டும் ஆசிரியரான தங்களுக்கு என்னாலான இந்தச் சிறு தொகையை அன்புக் காணிக்கையாக அனுப்பியிருக்கிறேன்" என்று எழுதியிருந்தது. அதைப் படித்த ரங்கனின் உள்ளம் தம்பியின் பெருமையையும், ஏட்டுப் படிப்பினால் தனக்கு உண்டான சிறுமையையும் எண்ணிப் பொருமியது.

# படித்துப் பாருங்கள்!

## ஸ்ரீ தத்தாத்ரேய குரு சரித்திரம்

மகாராஷ்டிர பாஷையில் உள்ள பக்தி ரசம் ததும்பும் இந்த நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது இதுதான் முதல் தடவையாகும். சேந்தமங்கலம் ஸ்ரீ சத்குரு பிரம்மேந்திர அவதூத சரஸ்வதி ஸ்வாமிகளின் சிஷ்யர் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் கட்டளைக்கு இணங்க இந்த நூலைப் பொன்மலை வெங்காஜிராவ் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார். தமிழ் நாட்டிலேயே சேலம் ஜில்லாவைச் சேர்ந்த சேந்தமங்கலத்தில்தான் சத்குரு தத்தாத்ரேய பகவானுடைய ஆலயம் இருக்கிறது. உயர்ந்த இந்த பக்தி மார்க்க நூலுக்கு ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் வழங்கியுள்ள ஸ்ரீமுகம் முதல் பக்கத்தை அலங்கரிக்கின்றது.

உயர்ந்த காகிதத்தில் அச்சிட்டிருக்கும் 350 பக்கங்கள் கொண்ட இந்த நூலின் விலை ரூ. 4. கிடைக்குமிடங்கள்: ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள், சேந்தமங்கலம், சேலம் ஜில்லா; ஸ்ரீ வெங்காஜிராவ், பொன்மலை, திருச்சி; ஸ்ரீ ரங்கநாத சாஸ்திரிகள், 80, வெள்ளாளத் தெரு, புரசவாக்கம், சென்னை.

## This Alone Is True

பால் மிக உயர்ந்த பொருள்தான். ஆயினும் அது நல்ல பாத்திரத்திலிருந்தால் அல்லவோ போற்ற முடியும்! அப்படிப் போலே, பரத நாட்டியக் கலையை இன்று உயர்குல குடும்பப் பெண்கள் பலர் பயின்று போற்றுவதால் எல்லோரும் அக்கலையின் சிறப்பை உணர்ந்து போற்றுகிறார்கள். ஆனால் முதல் முதலில் கலையார்வம் கொண்டு, தாழ்த்தப்பட்ட சமூதாயத்தினருடன் வாழ்ந்து, கலையைப் பயின்ற உயர்குலப் பெண்கள், தங்கள் சமூதாயத்தில் எவ்வளவு அவப் பெயரையும், ஏசல்களையும் கேட்டிருக்க வேண்டும்! பரத நாட்டியக் கலையில் எத்தனை ஆர்வமிருந்தால் இவ்வளவு இடையூறுகளையும், வெற்றிகரமாகச் சமாளித்திருக்க முடியும்!

இப்படிப்பட்ட அருங் கலாவிநோதினி ஒருத்தியின் அற்புத வாழ்க்கையை ஒரு ஸ்வாரஸ்யமான கதையாக இந்நூலாசிரியர் தீட்டியிருக்கிறார்.

பார்வதிக்குச் சிறு வயது முதலே பரத நாட்டியக் கலையில் ஆர்வம் உண்டாகிவிடுகிறது. பிறகு ஏதோ ஒரு குக்கிராமத்தில் வசிக்கும் நட்டுவனிடம் பரத நாட்டியம் பயில்கிறாள். இச் சமயத்தில் காதல் குறுக்கிடுகிறது. இந்தக் காதல் அவள் வாழ்க்கை லக்ஷ்யத்துக்குக் குந்தகமாக இருக்கும் போல் தோன்றுகிறது. உடனே காதலைத் தியாகம் புரிந்து விட்டு, கலையில் மோகம் கொண்டு, கலைக்கே தன் வாழ்க்கையைச் சமர்ப்பித்து விடுகிறாள்.

கதை தமிழ்நாட்டின் சூழ்நிலை கொண்டு வெகு ஸ்வாரஸ்யமாகச் செல்கிறது. இக்கதை எழுதிய ஆசிரியையும் உயர் குடும்பத்தில் பிறந்து பரத நாட்டியத்தில் ஆர்வங் கொண்டு பயின்று, உலக அரங்குகளில் ஆடிப் புகழ் பெற்றவர். ஆகலால், உள்ளத்தில் பிரகாசிக்கும் உண்மை ஒளியுடன் இக்கதை நன்கு எழுதப்பட்டிருக்கிறது.

ஆசிரியை: ஸ்ரீமதி மிருணாளினி ஸாராபாய்; பிரசுரம்: Meridian Books Ltd.. 8. Garrick St. London w. c. 2. விலை: 12 ஷில்லிங் 6 பென்ஸ்.

## காந்தி கதைகள்

காந்தி மகானின் சரித்திரமோ உபதேசங்களோ, அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த ருசிகரமான நிகழ்ச்சிகளோ, நம்மவர்க்கு மட்டுமல்ல, உலகத்து மக்களுக்கே புதியன அல்ல; உலகத்து மொழிகளில் எல்லாம் அவரைப் பற்றி வெளிவந்திருக்கின்றன.

மகாத்மாவின் வாழ்க்கைச் சம்பவங்களை ஆதாரபூர்வமாக அறிந்து, பல நூல்களிலிருந்தும் அவருடைய சுய சரித்திரத்திலிருந்தும் தொகுத்து, எளிய தமிழில் இந்நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. படிப்பதற்குச் ஸ்வாரஸ்யமாகவும் உருக்கமாகவும் இருக்கிறது. இந்த நூலை ஒரு புதிய முயற்சி என்றே கூறவேண்டும். மகாத்மாவின் கொள்கைகளையும் அற போதனைகளையும் சுலபமாக யாவரும் அறிந்து கொள்ள இந்நூல் பெரிதும் உதவியாயிருக்கும். இயற்றியவர்: கே. எஸ். ஜம்புநாதன்; பிரசுரம்: அமுத நிலையம் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை-18. விலை: ரூ. 5—0—0.




## 7. வாழ்க்கைப் பாதையிலே!

சுதாகர் நல்ல மார்க்குகள் வாங்கி எம். ஏ. பரீட்சையில் தேறினான். அவனுடைய நண்பர்கள், உற்றார் உறவினர்கள், பழக்கப்பட்டவர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள் ஆகியவர்களிடமிருந்தெல்லாம் அவனுக்கு வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. அவன் மேலும் படிக்க விரும்பினான். ஆனால் அவனுடைய சித்தப்பாவுக்கு வேலை மாற்றலாகியிருந்த ஊர் அவ்வளவு பெரிதல்ல. மேல் படிப்புக்கான வசதிகளும் அங்கே இல்லை. அதுமட்டும் அல்ல; அதைவிடப் பெரிய இடையூறும் வேறு இருந்தது. அவனுக்கோ அவனுடைய சித்தப்பாவுக்கோ அவனை மேலே படிக்கவைக்கக் கூடிய வசதிகளோ வழிகளோ இல்லை. எனவே, மேலே படிக்க வேண்டும் என்ற ஆசையிருந்தும் அவன் அதை அடக்கிக்கொள்ள வேண்டியதாயிற்று.

அதையும் தவிர எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் பணக்காரனாகப் பாடுபட வேண்டும் என்ற ஆசை வேறு சுதாகரின் இருதயத்தில் தீவிரமாயிருந்தது. தையல் வேலை செய்து தந்தைக்கு உதவி செய்யும் மனோரமாவைப் பார்த்த அன்றே அவனுடைய இருதயத்திலே, தான் பணக்காரனாகிவிட வேண்டும் என்ற எண்ணம் வேரூன்றித் தளிர் விட்டுக் கிளைக்கத் தொடங்கியது. அவனுடைய உள்ளம் முழுவதையும் ஒரே எண்ணம் தான் அடைத்துக் கொண்டிருந்தது.

லட்சக் கணக்கான ரூபாய்கள் சேர்த்து மனோரமாவின் காலடிகளில் கொண்டு போய் நாம் கொட்ட முடியாதா? அவளை அவளுடைய அந்தக் கொடும் ஏழைமைத் தளையிலிருந்து விடுவிக்க நம்மால் முடியாதா?

இந்த எண்ணத்தைத் தவிர வேறு எவ்விதமான எண்ணமும் அவனுடைய உள்ளத்தில் இடம் பெறவில்லை. இளைஞர்கள் எப்பொழுதுமே வருங்காலத்திய வாழ்வில் வலுத்த நம்பிக்கை உள்ளவர்களாக, உற்சாகமும் உணர்ச்சியும் ஒருங்கே அமையப் பெற்றவர்களாக இருப்பவர்கள். இளமை என்னும் சொல்லுக்கே உற்சாகம், உணர்ச்சி, நம்பிக்கை என்று பொருள் சொன்னாலும் தகும். இளைஞர்களின் இருதயத்திலே எழும் ஆசைகளுக்கு எல்லையே கிடையாது. அதோடு அவர்களுடைய நம்பிக்கைக்கும், உணர்ச்சிக்கும், உற்சாகத்துக்கும், உள்ளத்தில் உதிக்கும் ஆசைகளுக்கும் இளம் யுவதி ஒருத்தி பக்கத் துணை நிற்கிறாள் என்றால் அவர்களுடைய உள்ளத்திலே எழும் அந்த அபூர்வ உத்வேகத்தையும் உற்சாகத்தையும் பற்றிக் கேட்கவா வேண்டும்? அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் ஆகாயத் தாமரை பறித்து வா என்று அந்த வாலிபர்களை ஏவினால் கூடச் சிறிதும் சிரமமின்றி வெகு சுலபமாகக் காரியத்தைச் சாதித்துக் கொண்டு வந்து விடுவார்கள். ஒற்றை விரலில் ஹிமாலய மலையைக் கோவர்த்தன கிரியாகத் தூக்கவேண்டுமா? அவர்கள் தயார். சூரிய சந்திரர்களைப் பந்தாக உருட்டி விளையாட வேண்டுமா? அவர்களுக்கு அதுவும் ஒரு பொருட்டல்ல. வானத்தை வில்லாக வளைப்பதோ, மணலைக் கயிறாகத் திரிப்பதோ அவர்களுக்கு வெகு சுலபம். இந்த உலகத்தில் பெண்களுக்காக ஆண் பிள்ளைகள் என்னதான் செய்யவில்லை?

ஒவ்வொரு வாலிபனும் தன்னுடைய வாழ்க்கையைப்பற்பல ஆசைக் கோட்டைகள் கட்டிக் கொண்டே தான் ஆரம்பிக்கிறான். ஆனால் சுதாகரின் ஆசைக் கோட்டை மிக மிகப் பலம் பொருந்தியதாக இருந்தது. அவனுக்கு ஏற்பட்ட உற்சாகத்துக்குத் தலை கால் தெரியவில்லை. முடியுமானால் ஒரே நாளில் அள்ளி அள்ளிக் கொடுத்தாலும் குறையாத அளவற்ற பொருளை ஈட்டி விட வேண்டும் என்று அவன் மனக் கோட்டை அப்போதே கட்டத் தொடங்கி விட்டான். அவனுடைய குறிக்கோளே பணத்தைப் போர் போராகக் குவித்து மனோரமாவின் மலரடிகளிலே கொண்டு போய்க் கொட்டி விட வேண்டும் என்பதுதான். அதற்கப்புறம் அவளுடைய கண்களிலிருந்து பெருகும் அன்பு ரஸத்தை ஆசை தீரும் மட்டும் பருக வேண்டும், பருக வேண்டும், பருகிக் கொண்டே இருக்க வேண்டும் என்பதுதான்.

அவன் மனோரமாவுக்காக முடியாத காரியத்தையும் முடித்து விட வேண்டும் என்று விரும்பினான். ஆனால்......

மனோரமா அவனுடைய அன்புக் காணிக்கையை ஏற்றுக் கொள்வாளா, மாட்டாளா? அவள் ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தாலும், தன் மானமே பெரிதென்ற அகந்தையில்

மூழ்கி யிருக்கும் அவளுடைய தகப்பனார் ராமலால் அதற்குச் சம்மதிக்க வேண்டுமே! அவர் என்ன சொல்வாரோ?

இது போன்ற எண்ணற்ற சந்தேகங்கள் இடையிடையே அவன் மனத்திரையில் எழுந்தன, அலைமேல் அலை எழுவது போல. ஆனால் அடுத்த கணமே அந்தச் சந்தேகங்களுக்குச் சமாதானமும் ஏற்பட்டு வந்தது, ஒரு அலையை அழித்து விட்டு இன்னொரு அலை முன்னேறி வருவதுபோல. எனவே, அவன் உள்ளத்திலே சந்தேகம், சமாதானம், சமாதானம், சந்தேகம் ஆகியவை மாறி மாறி உருவெடுத்துக் கண்ணாமூச்சி விளையாடின.

அன்று துளசி பூஜை செய்வதற்காக வந்த மனோரமா அவனிடம் என்ன சொன்னாள்? கடிதம் எழுதுமாறு சொன்னாள் அல்லவா? ஆகா! அவள் குரலில்தான் என்ன அன்பு! என்ன குழைவு! அவள் கண்களில் அன்பு தாண்டவமாடிக் கொண்டிருந்தது. கரங்களில் அன்பு விளையாடிக் கொண்டிருந்தது. உடல் முழுவதும் அன்பு வெள்ளம் அலை மோதிக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது. அன்பு! அன்பு! அன்பு! அப்பொழுது அவள் அன்பே உருவாகத்தான் திகழ்ந்தாள். அப்படி யிருக்கும்பொழுது அவள் நமது அன்புக் காணிக்கையை ஏற்றுக் கொள்ள மாட்டாளா? அந்தக் காணிக்கையோடு கூடவே நம்மையும் அவள் ஏற்றுக் கொண்டு விட்டால் எவ்வளவு நன்றா யிருக்கும்?

இதுபோன்ற எண்ணம் நெஞ்சில் முளைத்ததோ இல்லையோ, அவனுடைய ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு நின்றுவிடும். உடல் முழுவதிலும் ஒருவித மின்னல் அலை ஊடுருவிப் பாய்வதுபோன்ற உணர்ச்சி உண்டாகிவிடும். கடலைக் கைக்குள் அடக்கி அதை ஆசமனம் செய்த குறுமுனியின் பலம் தனக்கு வந்து விட்டது போலத் தோன்றும். 'கடிதம் எழுதுவீர்கள் அல்லவா?' என்று கேட்டுக் கொண்டே மனோரமா அவனுடைய மனக் கண்களில் உயிர்பெற்று வந்து விடுவாள்.

பணத்தைப் பெருங் குவியலாகக் குவித்து மனோரமாவின் காலடிகளிலே கொண்டு போய்க் கொட்டாத வரையில், அவளுக்குக் கடிதம் எழுதத் தனக்கு உரிமையே இடையாது என்று அவன் எண்ணி யிருந்தான். இந்த எண்ணம் காரணமாகத்தான் எத்தனையோ தடவை கடிதம் எழுதவேண்டும் என்ற ஆசை அவனை உந்தித் தள்ளியும், அதை அடக்கிக் கொண்டு கடிதம் எழுதாமல் காலந்தாழ்த்தி வந்தான்.

மனோரமா எப்படி யிருக்கிறாள் என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அவன் மனத்தை அலைத்தெடுக்கும். ஆயினும் அவன் எப்படிக் கடிதம் எழுதுவது? எழுதினாலும் என்ன எழுதுவது? உணர்ச்சி வசப்பட்டுச் சிற்சில சமயம் கடிதம் எழுதக்கூட உட்கார்ந்து விடுவான். ஏன்? சில வரிகள் எழுதிக்கூட விடுவான். அதற்கு மேல் என்ன எழுதுவது என்று புரியாமல் விழிப்பான்; தவியாய்த் தவிப்பான். அப்புறம் அரைகுறையாக எழுதிய அந்தக் கடிதத்தைத் துண்டு துண்டாகக் கிழித்துக் குப்பைக் கூடையில் எறிந்து விட்டு மனோரமாவுக்காகப் பணம் சேர்ப்பது எப்படி என்னும் சிந்தனையில் மூழ்கித் தன் மூளையைக் குழப்பிக் கொள்வான்.

பம்பாய் பணத்தின் சுரங்கம். எடுக்க எடுக்க வற்றாத நீர் ஊற்றுக்குச் சமமான இடம் என்று அவன் கேள்விப் பட்டிருந்தான். மனிதன் முன்னேற வேண்டுமானால், பம்பாய் தான் சரியான இடம். அங்கே அதற்கான மார்க்கங்களுக்குக் குறைவே இல்லை. பணம் பண்ணுவதற்குப் பம்பாயில் கிடைக்கும் சௌகரியங்களைப் போல் வேறு எங்கும் கிடைக்காது என்றும் ஜனங்கள் சொல்லக் கேட்டிருந்தான். எனவே, உள்ளத்தில் ஆசை, நம்பிக்கை, ஆர்வம், உற்சாகம், உணர்ச்சி ஆகியவற்றை மூட்டை கட்டி எடுத்துக் கொண்டு பணம் சம்பாதிப்பதற்காக வேண்டிப் பணம் படைத்தவர்கள் வாழும் பம்பாய் நகரத்துக்குப் பயணமானான்.



பம்பாயில் சுதாகருக்குத் தெரிந்த நண்பன் ஒருவன், வெகு நாட்களாகவே இருந்து வந்தான். சுதாகர் நேரே அவன் அறையில் போய்த்தான் தங்கினான்.

நண்பனின் கிளிக்கூண்டு போன்ற அந்தச் சிறிய அறையைப் பார்த்ததும், அவன் உள்ளத்திலே, "இத்தனை பெரிய நகரம், இத்தனை பெரிய பெரிய வீடுகள்! இருந்தாலும் மனிதன் வாழ்வதற்குக் கைதியை அடைத்து வைத்திருக்கும் கூண்டுபோன்ற மட்டமான அறைகளா?" என்ற கேள்வி எழுந்தது. அத்துடன் தன் சுதந்திரமே பறி போய் விட்டது போன்ற உணர்ச்சியும் அவனை ஆட்கொண்டது.

அவன் பம்பாயில் தங்குவதற்கு வசதி செய்து கொண்டதும் முதல் காரியமாகப் பல இடங்களுக்கும் உத்தியோகத்துக்கு மனுப் போட்டான். அந்த மனுக்களுடன் அழகான நடையில் எழுதப்பட்ட அநேக அத்தாட்சி பத்திரங்களும் சேர்த்து அனுப்பி வைத்தான். சர்க்கார் காரியாலயங்களுக்கும், தொழிற்சாலைகளுக்கும், பெரிய பெரிய வியா

அவன் படியேறிப் பாராத கட்டிடங்கள் இல்லை. பார்க்காத பெரிய மனிதர்கள் இல்லை. ஒரு தடவை உத்தியோகம் என்று ஒன்று பெயருக்குக் கிடைத்து விட்டால், அப்புறம் முன்னேற்றத்துக்கான வழி தேடிக் கொள்ளலாம் என்று அவன் எண்ணினான்.



அந்த ஒரு நோக்கத்தைக் கருத்தில் கொண்டு அவன் உத்தியோகம் தேடும் முயற்சியில் கன கடுமையாக ஈடுபட்டான்.

ஆனால் முன்னேறுவதற்கான மார்க்கம், வாலிபர்கள்—அதுவும், வாழ்க்கையில் அதிகமாக அடிபடாத வாலிபர்கள் நினைப்பது போல அவ்வளவு சுலபமானதல்ல. இளம் ரத்தம் என்ன வெல்லாமோ எண்ணச் சொல்லுகிறது. உலகத்தில் புகுந்து புறப்பட்டால் அல்லவா, அதில் உள்ள கஷ்ட நஷ்டங்களோ, சிரமங்களோ தெரிய வரும்? காரியம் என்று இறங்கி விட்டால் ஜனங்கள் 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி போட்டுக் கொண்டு தன்னை உத்தியோகத்துக்கு எடுத்துக் கொண்டு விடுவார்கள் என்று அவன் எண்ணினான். ஆனால் உலகம் அவனைப் போல் ஆயிரக் கணக்கான லட்சக் கணக்கான சுதாகர்களைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தன் போக்கில் முன்னேறிக் கொண்டிருக்கிறது. தன் போன்றோர்களைப் பற்றிய நினைவே அதற்கு இருப்பதில்லை என்பது அவனுக்கு அதுவரை தெரியவில்லை. காரியம் என்று இறங்கின பின்தான், தான் எண்ணிய எண்ணமும் கட்டியிருந்த கோட்டையும் வெறும் பிரமையானவை, வீண் பிரமையில் ஆழ்த்துபவை என்பது அவனுக்கு விளங்கத் தொடங்கியது.

அவன் அனுப்பி யிருந்த மனுக்களுக்குப் பதில்கள் ஒவ்வொன்றாக வரத் தொடங்கின. 'வேலை காலியில்லை. வேறு ஒருவர் அந்த ஸ்தானத்துக்கு நியமிக்கப்பட்டு விட்டார். நீங்கள் கேட்கும் சம்பளம் ரொம்ப ரொம்ப அதிகம். உங்களைப் போன்ற திறமைசாலிகள் இந்தக் குறைந்த சம்பளத்துக்கு வேலை ஒப்புக் கொள்வதில் எங்களுக்குத் துளிகூட விருப்பமில்லை. உங்களைப் போன்ற கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள் எங்கள் காரியாலயத்துச் சிறிய உத்தியோகத்தை ஒப்புக் கொண்டு, வருங்காலத்தை வீணாக்கிக் கொள்வதை நாங்கள் கட்டோடு விரும்பவில்லை. அதனால் தங்களுக்குக் குறிப்பிட்ட உத்தியோகத்தைத் தரமுடியாதது குறித்து வருந்துகிறோம். இவ்வளவு படிப்புள்ளவர்கள் எங்கள் காரியாலயத்துக்குத் தேவையில்லை. நாங்கள் எத்தனையோ பட்டம் பதவி பெற்றவர்களை வேலைக்கு வைத்துக் கொண்டு பார்த்திருக்கிறோம். எங்களுக்கு அவர்கள் வேலையில் திருப்தியில்லை. நாலு கோணல் எழுத்துப் படித்தவர்களுக்குத் திமிர் அதிகம் ஆகிவிடுகிறது. எங்களுக்குப் பட்டம் பெற்றவர்கள் தேவையில்லை. தாங்கள் கல்யாணமாகாதவரா யிருப்பதனால், தங்களுக்கு எங்கள் காரியாலயத்தில் உத்தியோகம் தர முடியாதது குறித்து வருந்துகிறோம்.'

இது போன்ற இன்னும் எத்தனையோ கடிதங்கள் அவன் உத்தியோகத்துக்குச் செய்து கொண்டிருந்த மனுக்களுக்குப் பதிலாக வந்து குவிந்தன. அதோடு போட்ட மனுக்களுக்குப் பதில் வராதவை அனந்தம். பதில்களைப் படிக்கப் படிக்க அவன் நம்பிக்கை யிழந்து விட்டான். 'உலகத்துக்கு வேறு என்ன பொருள் தேவையோ, தேவையில்லையோ தெரியாது. ஆனால் சுதாகரின் தேவையே இல்லை என்பதை அவன் நிதர்சனமாகத் தெரிந்து கொண்டான்.

அவன் செல்வந்தர்கள், அதிகாரிகள், ஆபீஸர்கள் எல்லோரையும் அவர்கள் தெரிந்தவர்களாயிருந்தாலும் சரி, தெரியாதவர்களாயிருந்தாலும் சரி, தானே நேரில் சந்தித்துக் கேட்டு விடுவது என்று தீர்மானித்துக் கொண்டான். தனது ஆஜானுபாகுவான தேகம், சிவந்த மேனி, அழகிய குறு குறு வென்றிருக்கும் முகம், கவர்ச்சிகரமான முறையில் தனக்கு உள்ள பேசும் திறன் ஆகியவற்றை நேரில் ஒருவர் பார்த்தால் அதற்குப் பலன் ஏற்படாமல் போகாது என்று அவன் எண்ணினான். ஆனால் பணமும் பதவியும் படைத்தவர்களின் மனத்தில் தன் பெயரைப் பதிய வைக்க அவன் செய்த முயற்சிகள் அனைத்தும் பலன் தரவில்லை; ஈடேறவில்லை.

ஒரு நாள் சுதாகர் ஒரு பெரிய மனிதரைச் சந்திக்கச் சென்றான். அவர் அவனை அரை மணி நேரத்துக்குமேல் காக்க வைத்து அவன் பொறுமையைச் சோதித்த பின்னர் பேட்டி கொடுக்க இசைந்து, சேவகனிடம் சொல்லியனுப்பினார். அவன் அவரைக் காண அவருடைய அறைக்குள்ளே நுழைந்தான். அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "சுதாகர் என்பது உங்கள் பெயர் தானோ?" என்று கேட்டார் அவர்.

"ஆமாம்!"—சுதாகர் வெகு நாகரிகமாகவும் நாசுக்காகவும் பதில் சொன்னான்.

"ஊம்—சரி, தாங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்ட அந்தச் செல்வந்தருடைய கவனம் வேறு எங்கோ இருந்தது.

"நான் எம். ஏ. பாஸ் செய்திருக்கிறேன்... தங்களிடம் வேலை...... "

"ரொம்ப சரி!......டேய்! யார் அங்கே? வண்டி வந்து விட்டதா, பார்!......சரி, அப்புறம் சொல்லுங்கள்! தாங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள்?" என்று மறுபடியும் அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டார் அவர்.

"எனக்கு ஒரே ஒரு ஆசை...... "

சுதாகர் பேச்சை முடிப்பதற்குள்ளாகவே பிரமுகர் மறுபடியும், தமது வேலைக்காரனைக் கூப்பிட்டு, "டேய்! டெலிபோனில் யார், பார்!" என்றார். பிறகு, "......அப்புறம் சொல்லுங்கள். உங்கள் ஆசை நல்ல ஆசை தான்!" என்றார்.

இந்த மனிதன் பித்தம் தலைக்கேறியவனாயிருப்பானோ என்று எண்ணத் தோன்றியது சுதாகருக்கு. 'பேசப் பொழுது இல்லாதவன் இப்படி அநாவசியமாகத் தன்னைக் கூப்பிட்டு அனுப்புவானேன்?' என்று எண்ணினான். இருந்தாலும், அவனுக்குக் காரியம் அல்லவா ஆக வேண்டும்! "அப்படியானால் நான் விடை பெற்றுக் கொள்கிறேன். அப்




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமணமுள்ளது.




தயாரிப்பாளர்கள்:
பவநகர் ஆயில்
அண்டு கெமிகல்
இண்டஸ்ட்ரீஸ் லிட்., பவநகர்.

த. பெ. தெ. 1611, பம்பாய்-1

விநியோகஸ்தர்கள்:

**ஜி. கே. ஸிண்டிகேட்**
119, அரண்மனைக்காரத் தெரு, சென்னை

**எஸ். தர்மராஜன்**
40, நாயக்கர் புதுத் தெரு, மதுரை

**நாயகம் மெடிகல் ஸ்டோர்ஸ்**
தூத்துக்குடி.



**பைல் பீன்ஸ் உங்களை ஒல்லியாகவும் யௌவனமாகவும் இருக்கச்செய்கிறது**

உலகம் முழுவதிலுமுள்ள மக்கள் முறைப்பிரகாரம் பைல் பீன்ஸ் சாப்பிடுவதால் யௌவனமும் இளமையும் ஒல்லியுமாக ஆரோக்கியமான தோற்றத்துடன் இருக்கிறார்கள். டாக்டர்கள் அங்கீகாரம் பெற்ற பைல் பீன்ஸ் என்னும் டானிக் மலசுத்தி மருந்து மலச்சிக்கலுக்கு சிறந்த நிவாரணியாகும். மேலும் அஜீரணம் மற்றுமுள்ள பல நோய்களை அது நீக்கும். இன்றே பைல் பீன்ஸை முறையாக உட்கொள்ள ஆரம்பியுங்கள்.

டாக்டர்கள் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை உட்கொண்டு வாழ்க்கை இன்பத்தை பூரணமாகப் பெறுங்கள்.



# பைல் பீன்ஸ்

எல்லா மருந்து வியாபாரி கடைகளிலும் கிடைக்கும்.

மதராஸிற்கு சோல் ஏஜண்ட்கள்: தாதா & கோ., பார்க்டவுன்

LO/G/2



# அம்மாவும் நானும் விரும்புவது....

உலகத்திலேயே குழந்தைகளுக்கேற்ற ஆகாரங்களைத் தயாரிப்பதில் கைதேர்ந்தவர்களான நெஸ்ல்ஸால் தயாரிக்கப்பட்ட லாக்டோஜனே யாகும். என் தாயார் அதை விரும்புவதற்குக் காரணம் அதில் விடமின்களும், இரும்புச் சத்துக்களும் சேர்ந்திருப்பதேயாகும். விடமின் 'A' சரீரத்தை சீக்குகளிலிருந்து பாதுகாப்பதற்கும், விடமின் 'D' நல்ல பற்கள் வளருவதற்கும், இரும்புச் சத்துக்கள் இரத்த புஷ்டிக்கும், சிறந்தது.

நான் லாக்டோஜனை விரும்புவதற்குக் காரணம், அது ருசியுள்ளதாயிருப்பதுடன், எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மேலும் இதை சீக்கிரமாக தயாரிக்க முடிவதால், பசித்தவுடன் சாப்பிட முடிகிறது. என் சிநேகிதர்கள் எல்லோரும் லாக்டோஜனை விரும்புகிறார்கள். இந்த ஒரு விஷயத்தில் நான் அவர்களுடைய தாயார்களும், அவர்கள் சொன்னதை சரி என்கிறார்கள்.




NESTLE'S **LACTOGEN**

குழந்தைகளுக்குச்
சிறந்த ஆகாரம்.

எங்களுடைய இலவச லாக்டோஜன் புஸ்தகத்தை படியுங்கள். இந்த கூபனில் உங்களுடைய பெயரையும், முழு விலாசத்தையும் எழுதி

நெஸ்ல்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 187, மதராஸ்.

என்ற விலாசத்திற்கு இன்றே போஸ்ட் பண்ணுங்கள்.



பெயர் ..........................................................

விலாசம் ........................................................

..................................................................

புறம் வந்து பார்க்கிறேன். தற்சமயம் தங்களுக்கு ஜோலி அதிகமாயிருக்கிறப்போலிருக்கிறது!" என்று சொல்லி எழுந்தான்.

"ஆமாம், ஆமாம்! அப்புறமே வாருங்கள்" என்று சொல்லிப் பிரமுகர் எழுந்துவிட்டார்.

சுதாகர் அலுத்துச் சலித்துக் கொண்டே அங்கிருந்து புறப்பட்டு வேறு இடத்துக்குப் போனான். வாசலில் மணிக் கணக்காக உட்கார வைத்தபின் காவற்காரன் வந்து, "ஐயா! இன்று எஜமான் யாரையும் பார்க்க மாட்டார்கள்!" என்று சொன்னான்.

அதைக் கேட்ட சுதாகருக்கு ஏற்பட்ட ஆத்திரத்துக்கு ஓர் எல்லையில்லை. 'பணம் படைத்தவர்கள் இப்படி மூளை படைக்காதவர்களாக இருப்பானேன்?' என்று முணு முணுத்துக் கொண்டே எழுந்தான். அவன் என்ன முணு முணுத்து என்ன? பணக்காரர்கள் பணக்காரர்கள்தானே? அவர்கள் சொல்லுக்குத்தானே இந்த உலகத்தில் அதிக மதிப்பும் மரியாதையும் இருக்கிறது?

சுதாகருக்குத் தன் மானம் கப்பலேறுவது போலத் தோன்றியது. தன் செருக்கின் வேர்-ஆணி வேர் சல்லி வேர் உள்பட - ஆழக்குழி தோண்டி அறுத்தெறியப் படுவது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. இந்த உலகத்தில் அவனுக்கு இடமே கிடையாதா? அவன் தன்னைத்தானே நொந்து கொண்டான்; திட்டிக் கொண்டான். என் கல்வி, என் படிப்பு, என் அறிவு, என் திறமை, என் கெட்டிக்காரத்தனம் இவற்றுக்கெல்லாம் கலைவாணியின் கோயிலிலே பெருமை கிட்டியது. செல்வத்துக்கு அதிஷ்டான தேவதையான லட்சுமியின் கோயிலிலே இவற்றுக்குப் பெருமையே கிடையாதா? தேவையே ஏற்படாதா? லக்ஷ்மியை ஆராதிப்பவர்களுக்கு பணம் ஒன்றைத் தவிர வேறு எந்த விதமான தகுதியுமே தேவை யில்லையா?

இவ்விதம் சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் நடந்து கொண்டிருந்த சுதாகரின் கண்களிலே ஐந்தாறு கோச்சு வண்டிகளும், ஐந்தாறு மோட்டார்கார்களும் 'விர்' என்று வாயு வேக மனோவேகமாக ஓடிக் கொண்டிருப்பது விழுந்தது. இகலோகத்தில் லக்ஷ்மி தேவியின் அவதாரமான செல்வத்தின் கடைக்கண் பார்வைக்கு இலக்கானவர்கள் அதிலே ஆடம்பர உடை யுடுத்தி அமர்ந்திருந்தனர். அவர்களைத் தரிசிக்கும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்தது. அவர்களைக் கண்ட மாத்திரத்தில் அவனுக்கு அடக்கமாட்டாத சிரிப்பு வந்தது. ஏனெனில் ஒருவனுக்குக் காரில் உட்காரவே வரவில்லை. அவன் அப்படியே விழுந்து கிடந்தான், இனி எழுந்திருக்கவே வேண்டி யிராது என்று எண்ணி யிருப்பவனைப் போல். பண போதை அவனை அப்படிச் செய்யத் தூண்டிக் கொண்டிருந்தது.

அதைக் கண்ட சுதாகர் 'உட்காரத் தெரியாதவனுக்கு மோட்டார் எதற்கோ?' என்று மனத்துள் சிந்திக்கத் தொடங்கினான்.



"என் மனைவி, நான் வாங்கிய புதுப் புடவையை உடுத்திக் கொண்டு உங்கள் மனைவியிடம் வரப் போகிறாள்! பாவம், உங்களுக்கு என் அனுதாபம்!"

"அப்படியா? என் மனைவியும் புதிதாகப் பண்ணிக் கொண்ட நகைகளுடன் உங்கள் மனைவியைப் பார்க்கப் போயிருக்கிறாள்! ஆகையால் உமக்கும் என் அனுதாபங்கள்!"

---

அந்தச் சிந்தனை முடிவதற்குள்ளாகவே அடுத்த கார் அவன் கண்களிலே புகுந்து சென்றது. "அப்பா! மோட்டார் முழுவதையும் ஒருவனே யல்லவா அடைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்! மனிதன் இவ்வளவு பருமனாக-மாமிச பிண்டமாக இருக்க முடியுமா? பளு தாங்காமல் வில் வளைந்து தெறிக்காமல் இருக்க வேண்டுமே!" என்று எண்ணினான்.

அதற்குள்ளாக மூன்றாவது மோட்டார் வந்து விட்டது. "அடேயப்பா! மனிதன் இவ்வளவு குரூபமாகவும் இருக்க முடியுமா? இவனை எந்தப் பெண் கல்யாணம் செய்து கொள்ள முன் வருவாள்?" என்றெண்ணினான்.

அதற்குமேல் அவன் மூளையைச் செலவிட இடம் வைக்கவில்லை, அதைத் தொடர்ந்தாற் போல் வந்த மற்றொரு கார். அது அவன் கேள்விக்குத் தன் பாஷையில் பதிலைச் சொல்லிக் கொண்டே நகர்ந்தது.

அதில் கன்னங்கரேல் என்று மலைபோல பருமனான, பார்க்க அருவருக்கத்தக்க ஒரு மனித உருவம் உட்கார்ந்திருந்தது. அதன் பக்கத்திலேயே அழகிகளுக்கெல்லாம் அழகி என்று சொல்லத்தக்க ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். பெண்ணின் முகம் மலர்ச்சி பெற்றுச் சிரித்த முகமாகக் காட்சி அளித்தது. அவலட்சணமே உருவான அந்த மனிதனுடன் உட்காருவதற்கு அவளுக்கு வெட்கமோ, அருவருப்போ வருத்தமோ சிறிதும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

அதைக் கண்ட அவன் மேலும் யோசனை செய்வதை நிறுத்தி விட்டான். ஆனால் இப்

பாழும் மனம் ஒரு நிமிஷம்கூடச் சும்மா யிருப்பதில்லையே! அவன் அந்த யோசனைக்கு முற்றுப்புள்ளி வைத்தானே யொழிய, யோசனைக்கே முற்றுப்புள்ளி வைக்க அவனால் முடியவில்லை. "நாம்தான் இந்த உலகில் மிக மிக மோசமானவன், மட்டமானவன்!" என்று அவன் மனத்துள் யோசிக்கலானான்.

அவன் அப்படி யோசனையில் ஆழ்ந்த வாறே நடந்து கொண்டிருந்த பொழுது, வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்த சூரியன் தரையை நோக்கி இறங்கிக் கொண்டிருந்தான். தன் வர்ண விசித்திர ஜாலங்களைக் காட்டி, உலகத்துக்கு ஒளி காட்டும் சூரியன் இருளிலே மறைய முன்னேறிக் கொண்டிருந்தான். மலை வாயில் விழுந்து கொண்டிருந்த அந்தப் பொழுதிலும் அவன் உலகத்துக்கு ஒளி அளித்துக் கொண்டிருந்தான். மறையும் பொழுதுங்கூட அவன் கதிர்கள் மகிழ்ச்சியும் மலர்ச்சியும் காட்டிச் சிரித்துக் கொண்டிருந்தன. சிறுகச் சிறுகச் செக்கர் வானம் ஒளி மங்கி நீலமாகிக் கரிய இருள் சூழ்ந்ததாகி விட்டது.

அதனால் உலகத்துக்கு என்ன? தினம் தினம் தான் சூரியாஸ்தமனம் ஆகிறது! கண்ணுக்கினிய காட்சிகளைக் காட்டியவாறே மாலைக் கதிரவன் மலைவாயில் மறைகிறான். உலகம் இதுபோன்ற எத்தனையோ கணக்கற்ற சூரியாஸ்தமனங்களைக் கண்டிருக்கிறது. ஆனால் பொருளை ஈட்டுவதையே குறிக்கோளாகக் கொண்ட இந்த உலகம் அந்த இனிய காட்சியைக் கண்டு எங்கே ரசித்திருக்கிறது? இன்றையச் சூரியாஸ்தமனம் நம் பையில் எத்தனை பொருளை நிரப்பி யிருக்கிறது என்று தானே இந்த உலகம் கணக்கிடுகிறது? பணம் சம்பாதிப்பதையே குறிக்கோளாகக் கொண்ட இந்த உலகம் பகலைப் பகல் என்று பார்ப்பதில்லை. இரவை இரவு என்றும் பார்ப்பதில்லை. சூரியோதயத்தையோ சூரியாஸ்தமனத்தையோ கலைக் கண் கொண்டு நோக்குவதில்லை. கேவலம் காசுக் கண் கொண்டு தான் நோக்குகிறது; மதிப்பிட்டு மகிழ்கிறது.



"ஒன்றுக்கும் கீழே சைபர்; சைபருக்கும் கீழே ஒன்றுமில்லை."

"சைபருக்கும் கீழே ஒன்றுமில்லை என்று எப்படிச் சொல்லுகிறாய்?"

"அப்படி இருந்தால் நீங்கள் எனக்கு மார்க்குக் கொடுக்கும் போது அதைத்தானே போட்டிருப்பீர்கள்!"

சுதாகர் எண்ணமாகிய சிலந்தி வலையில் சிக்கியவாறு முன்னேறிக் கொண்டிருந்தான். அவனுக்கு வீடு திரும்ப வேண்டும் என்ற சிந்தனையே எழவில்லை. நன்றாக இருட்டி விட்டது. ஜனங்கள் கடல் அலை போல் மிதந்து சென்று கொண்டிருந்தனர். வெறிச்சோடிய மனத்துடன் சுதாகரும் சென்று கொண்டிருந்தான். அவன் உள்ளம் சூன்யமாயிருந்தது. ஆனால் கால்கள் மட்டும் தன் இச்சைப்படி நடந்துகொண்டிருந்தன. அவன் கண்கள் திறந்திருந்தன. ஆனால் அவன் கண்களுக்கு ஒன்றுமே புலப்படவில்லை.

ஜன்னல்களிலும் மாடிகளிலும் பல பெண்கள் தங்களை நன்றாக அலங்கரித்துக் கொண்டு வீதியிலேயே விழி வைத்த வண்ணம் உட்கார்ந்திருந்தனர். பெண்களுக்கு இயல்பாக இருக்க வேண்டிய அச்சம், மடம், நாணம் பயிர்ப்பு ஆகியவை அப் பெண்கள் இருக்கும் இடத்திலே தலை காட்டியதாகத் தோன்றவில்லை. வகை வகையான ஆடை அலங்காரங்கள் செய்து கொண்டு விதவிதமான வயதுகளை உடைய ஆண் பெண்கள் அங்கே கண்காட்சிப் பொருள்களாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தனர்.

அவர்கள் முகத்தைப் பார்த்ததுமே சுதாகர் அவர்கள் வாழ்க்கையில் வழி தவறியவர்களாகத் தான் இருக்க வேண்டும் என்பதை உணர்ந்து கொண்டான். வழி தவறி விட்டவர்களின் முகத்தில், வழி தவறி விட்டார்கள் என்பது தெளிவாக எழுதி ஒட்டியிருக்கும் போலும் என்று எண்ணினான் அவன். ஏனெனில் அம்மாதிரியானவர்களைக் கண்டதும் புரிந்து கொள்வதில் பொதுவாகக் கண்கள் தவறு இழைப்பதில்லை யல்லவா?

"நான் இங்கே எங்கே வந்தேன்?"—இதை எண்ணியபொழுது அவனுக்கு எல்லையற்ற வெட்கம் உண்டாயிற்று. அதைத் தொடர்ந்தாற் போலவே, 'நம்மை இங்கே யாராவது பார்த்து விட்டால்...?' என்ற எண்ணம் எழுந்தது. உடனே அவன் முகத்திலே வருத்தமும் வேதனையும் குமிழியிட்டன.

அங்கிருந்து ஓடி விடுவது என்று முடிவு செய்து அவன் ஓடவும் தயாராகி விட்டான். கொஞ்ச தூரம் சென்றதும் அவன் தற்செயலாகப் பரமானந்தரைச் சந்தித்தான். அவரைப் பார்த்ததும் அவனுக்குத் திகைப்பு ஏற்பட்டது. "இந்தக் கிழவரும் கூட..." என்ற எண்ணம் எழுந்து அவனை இன்னும் திகைத்துத் திக்பிரமை அடைய வைத்தது.

"ஏன், சுதாகர்! என்னைத் தெரிகிறதா?" என்று ஒரு கேள்வியைக் கேட்டுப் பரமானந்தர் அவனை மேலும் திகைக்க வைத்தார்.

"தெரியாமல் என்ன? நீங்கள் ராமலாலின் வீட்டுக்கு வந்திருந்தீர்கள் அல்லவா?"

"நீ எப்பொழுதப்பா பம்பாய்க்கு வந்தாய்?"—பரமானந்தர் அன்பும் ஆதரவும் பொங்கக் கேட்டார்.

"கொஞ்ச நாட்கள்தான் ஆயிற்று. தாங்கள் சௌக்கியந்தானே?" என்று குசலப் பிரச்னம் விசாரித்தான் சுதாகர்.

பரமானந்தரைப் பலர் அங்கே அறிந்திருக்கிறார்கள் என்பதை அங்கே நின்று கொண்டிருந்த சிறிது நேரத்துக்குள் சுதாகர் கண்டு கொண்டான். அவரைப் பார்த்து, "நமஸ்காரம், வணக்கம், சௌக்கியமா? எங்கே இந்தப் பக்கம்?" என்று கேட்டுப் போகாதவர்கள் இல்லையென்றே சொல்லிவிடலாம்.

"எங்கே அப்பா தங்கியிருக்கிறாய்?" என்று கேட்டார் பரமானந்தர்.

"ஒரு நண்பன் வீட்டில் தங்கியிருக்கிறேன்!" என்றான் சுதாகர்.

"அவனை அழைத்து வரவில்லையா?" என்று கேட்டார் பரமானந்தர்.

அதைக்கேட்ட சுதாகரை வெட்கம் சூழ்ந்து கொண்டது. எவ்வித நோக்கமும் இன்றி எதுவும் யோசிக்காமல் அவன் இந்தப் பக்கம் எங்கே வந்து சேர்ந்தான்? அவன் பரமானந்தரிடம் எல்லாவற்றையும் விவரமாகத் தெளிவாகச் சொல்லி விடவேண்டும் என்று எண்ணினான். ஆனால் அவன் நா எழும்பவில்லை.

பரமானந்தர் அவனுடைய பதிலுக்காகக் காத்திருக்கவில்லை. "இந்த உலகத்தைப் பார்த்தாயா? சரித்திரங்களும் இதிகாச புராணங்களும் காவியங்களும் கற்புக்கரசிகளின் கதையை மட்டுந் தானே கூறுகின்றன! ஆனால் பாவமே உருவான உனது இந்த உலகம், அந்தக் கற்புக் கரசிகளின் இந்தச் சகோதரிகளை எந்த நிலையில் வைத்திருக்கிறது, பார்த்தாயா?" என்று கேட்டார்.

அழுக்கும் இழுக்கும் நிறைந்த சூழ்நிலையில் அறிவு நிறைந்த பரிசுத்தமான சொற்களைக் கேட்ட சுதாகருக்கு வியப்பு மேலிட்டது. அவன் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை. திகைப் பூண்டை மிதித்தவன்போல் பிரமித்துப்போய் வாய் அடைத்து நின்றான்.

"ஆமாம், நீ ஏதாவது உத்தியோக விஷயமாகப் பம்பாய்க்கு வந்திருக்கிறாயா, என்ன?" என்று கேட்டார் பரமானந்தர்.

"ஆமாம்!"

"எங்கேயாவது உனக்கு உத்தியோகம் கிடைத்துவிட்டதோ?"

"இல்லையே! எங்குமே கிடைக்கவில்லையே! இந்த உலகத்துக்கு நான் தேவையே இல்லை போலிருக்கிறது!"—சுதாகர் நம்பிக்கை யிழந்து ஒடுங்கிய குரலில் கூறினான்.

"ஆண்கள் கொள்ளை யடிக்க வேண்டும். பெண்கள் கொள்ளை போகவேண்டும். இவற்றைத் தவிர உயிர் வாழ வேறு என்ன வழியிருக்கிறது?" என்றார் பரமானந்தர்.



திண்டுக்கல் பர்மாஷெல் ஏஜண்ட் ஸ்ரீ ஆர். செங்கநாதன் அவர்கள் குமாரி ஆ. சன்தாவின் பரதநாட்டிய அரங்கேற்றம் 5-7-53ல் தஞ்சை ராமநாதன் செட்டியார் ஹாலில் சிறப்பாக நடந்தேறியது. வித்வான்களும் ரஸிகர்களும் பொது ஜனங்களும் கண்டு ஆனந்தித்தார்கள்.

அவர் எப்பொழுதுமே சிரித்த முகமாயிருப்பவர். ஆனால் அந்த வாக்கியத்தைக் கூறும்பொழுது அவருடைய உள்ளத்தை வேதனை பிழிந்தெடுத்தது; முகத்திலே வருத்தம் படர்ந்தது.

இதே சமயம் திடீரென்று ஒரு புதிய ஆசாமி வந்து மெதுவான குரலில், "வேறு வழியாகப் போங்கள். இந்தப் பக்கத்தில் நான்கு சோதாக்கள் கையில் கத்தியுடன் நின்று கொண்டிருக்கிறார்கள்!" என்று பரமானந்தரிடம் சொன்னான்.

அதைக் கேட்ட பரமானந்தரின் கண்கள் பளிச்சிட்டன. அடுத்த நிமிஷமே, "சுதாகர்! இந்தப் பக்கமாக வா!" என்றார்.

பக்கத்திலேயே ஒரு சந்து இருந்தது. அந்தச் சந்தில் ஒரே இருட்டாக இருந்தது. பரமானந்தரும் சுதாகரும் அந்த இருள் சூழ்ந்த சந்து வழியே நடக்கலானார்கள்.

"சுதாகர்! பயப்படாதே! இதுதான் யமபுரி, நரகலோகம். இதைப் பாராமல் சொர்க்கத்தைப் பார்க்க முடியாது. நட!" என்றார் பரமானந்தர்.

இரண்டு பேரும் பேசாமல் முன்னேறிக் கொண்டிருந்தனர். சுதாகருக்கு ஏற்பட்ட ஆச்சரியத்துக்கு ஓர் எல்லையில்லை. என்ன நடக்கப் போகிறது என்று அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவனுடைய உள்ளம் தென்பிழந்து விட்டது. அவன் பரமானந்தருக்குப் பின்னால் காந்தம்போல் கவரப்பட்டுச் சென்றான். இருள் சூழ்ந்த அந்தப் பாதையில் அவன் இருதயம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது.

பரமானந்தர் கம்பீரமே உருவாகக் காட்சி அளித்தவாறு அவனுக்கு வழி காட்டியாக முன்னேறிக் கொண்டிருந்தார். (தொடரும்)




சித்திரை மாதத்தில் ஒரு நாள் இரவு எங்கள் கிராமத்துக்குச் சென்றிருந்தேன். அப்பொழுது எனக்குத் தெரிந்த ஒருவர்கூட அந்தக் கிராமத்தில் இல்லை. கையில் காலணா காசுகூடக் கிடையாது. கிராமத்தில் தங்குவதற்கும் வசதியில்லை. ஆகவே நான் சின்ன வயதில் விளையாடிப் பொழுதைப் போக்கிய முல்லை வனத்துக்குச் சென்றேன். பெயர்தான் முல்லைவனமே ஒழிய அதில் மருந்துக்குக்கூட ஒரு முல்லைக்கொடி இருந்து நான் பார்த்ததில்லை. இலுப்ப மரங்களும், மாமரங்களும், இன்னும் பலப் பல காட்டு மரங்களும் நிறைந்த ஒரு வனம் அது. அந்த வனத்துக்குள் சென்றேன். நான் சிறுவனாக இருக்கும்போது பார்த்தது போலவே அந்த வனம் காட்சியளித்தது. அதற்குள் புகுந்தவுடன் என் பிள்ளைப் பிராயத்து இன்ப நினைவுகள் எல்லாம் வந்து என்னை எங்கோ இன்ப உலகத்துக்கு அழைத்துச் சென்று விட்டன. எல்லாம் ஒரு கண நேரம்தான். அதற்குள் வயிற்றுப் பசி வந்து என்னை வாட்ட ஆரம்பித்து விட்டது.

பாதையில் உதிர்ந்து கிடந்த இலைச் சருகுகளைக் காலால் உதைத்துத் தள்ளிக்கொண்டே அங்கு தன்னந்தனியே அலைந்து கொண்டிருந்தேன். திடீரென்று வானத்தில் மின்னல் மின்னியது. வடக்குத் திசையிலிருந்து காற்று பலமாக அடித்தது. மழை தூற ஆரம்பித்து விட்டது. பசியும் களைப்பும் என்னைப் படுத்தி வைக்க, செய்வது இன்னதென்று அறியாமல் தூரத்தில் தெரிந்த கோயிலை நோக்கிச் சென்றேன். நாற்புறமும் இடிந்து கிடந்த அந்தக் கோயில் மிகவும் விகாரமாகக் காணப்பட்டது. சுற்றுப்புறத்தில் யாருமே இல்லாததால் ஒரே சூன்யமாகவும் இருள் சூழ்ந்தும் இருந்தது. காற்று முன்பை விட அதிகமாகச் சுழன்று சுழன்று வீசிக்கொண்டிருந்தது. இடிந்து போன அந்தக் கோயிலின் மீது மழை பெய்வது வேறு ஒரே இரைச்சலாக இருந்தது.

ஏதாவது ஒரு மூலையில் சற்றுப் படுக்கலாம் என்று நினைத்துக் கோயிலின் உள் பக்கம் கூர்ந்து நோக்கினேன். அங்கு பெண்ணுடையில் இருந்த ஓர் உருவம் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தேன். அவள் உடை மழையில் நனைந்திருந்தது. அவள் இருந்த இடத்துக்கு அருகில் சென்று அவள் என்ன செய்கிறாள் என்று குனிந்து பார்த்தேன்.

'கிரீச்' என்று கத்திக் கொண்டே துள்ளிக் குதித்து எழுந்து நின்றாள். அவள் நிமிர்ந்து நின்ற போதுதான் அவளை என்னால் நன்றாகப் பார்க்க முடிந்தது. அவள் ஒரு கிழவி. வயது சென்று விட்டதால் சற்றுக் கூனிப் போயிருந்தாள். ஒரு காலத்தில் கருத்துப் பள பள வென்றிருந்த அவள் தலை மயிர் வெள்ளை வெளேரென்று காணப்பட்டது. அவள் கண்கள் மட்டும் அந்த இருட்டிலும் பளபள வென்று மின்னின.

மழையின் இரைச்சலும் காற்றின் வேகமும் கொஞ்சம் கொஞ்சமாக மங்கிக் கொண்டே வந்து மறைந்தது. திடீரென்று வானம் வெளுத்தது. சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களை வாரி இரைத்து முல்லை வனத்தை அழகுபடுத்த ஆரம்பித்து விட்டான். இடிந்துபோன அந்தக் கோயில் சந்திரனின் ஒளி பெற்றுப் புதுமை கொண்டு விளங்கியது. வயது சென்ற அந்தக் கிழவியை இப்பொழுது என்னால் நன்றாகப் பார்க்க முடிந்தது.

முல்லை வனத்தில் யாரோ வீணை மீட்டும் சத்தம் கேட்டது. ஒரு பெண் வீணையோடு சேர்ந்து மெல்லிய குரலில் பாடுவது போலிருந்தது. அந்தக் கீதத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும்போதே பாட்டும் வீணையின் நாதமும் சட்டென்று நின்றன. யாரோ இரண்டு பேர் சேர்ந்து சிரிக்கும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் வர வரப் பெரிதாகி இப்பொழுது முல்லை வனம் முழுவதும் நூறு நூறு பேர்கள் சேர்ந்து நின்று கல கல வென்று சிரிப்பது போலிருந்தது. என்னெதிரில் இருந்த கிழவியும் தன் பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் கொண்டிருந்தாள். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. என் பசி தாகம் எல்லாம் போய் என்னை ஒரு மாதிரி பயம் சூழ்ந்து கொண்டது.

"பாட்டி ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்! நீங்கள் யார்! இந்தக் கோயிலில் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்!" என்று கேட்டேன். என் குரலில் இருந்த பயத்தை அந்த அம்மையார் தெரிந்து கொண்டாள் போலும்.

அலட்சியமாக என்னைப் பார்த்தாள். "சேச்சே! தமிழர்களுக்குப் பிறக்கும்போதே கிழடு தட்டிவிடுகிறது. எடுத்ததற்கெல்லாம் பயந்து சாகிறார்கள்" என்றாள். அவளது வறண்டு போன குரல் விசித்திரமாக ஒலித்தது. சிலேட்டுப் பலகையில் சிற



குழந்தைகள் மணலைப் போட்டுத் தேய்ப்பது போல அது கரகரத்தது.

"அதோ பார் முல்லைவனத்து மோகினியை!" என்று காட்டுக்கு மத்தியில் கையை நீட்டினாள்.

தனது நடுங்கும் கைகளால் நடுங்காமல் அந்தக் கிழவி சுட்டிக் காட்டிய திசையைக் கவனமாகப் பார்த்தேன். நிலவொளியில் மரங்களின் நிழல்கள் நீளமாகவும் குட்டையாகவும் தோன்றியதைப் பார்த்தேன். அவற்றில் ஒரே ஒரு நிழல் மட்டும் விசித்திரமாகத் தென்பட்டது. அதுவும் ஒடிந்து போன ஒரு மரக் கிளையின் நிழல்.

"எனக்கு யாரும் தெரியவில்லையே" என்றேன்.

"கிழவியான என்னுடைய கண்களைவிட உன் கண்கள் மோசம். இப்போதுதான் பிறக்கும் போதே குழந்தைகள் கண்ணாடி போட்டுக் கொண்டு பிறக்கின்றனவே. நம் நாட்டின் வளம், நம் நாட்டு மக்களின் தேக திடம் எல்லாம் நம்முடைய மக்களின் சோம்பேறித்தனத்தினாலேயே வீணாகிக் கொண்டு வருகின்றது. அதோ பார்! அந்த உருவம் இப்பொழுது நன்றாக ஆடி விளையாடுகிறது பார்!" என்றாள்.

நான் மீண்டும் ஒரு முறை கூர்ந்து பார்த்தேன். நிழலைத் தவிர வேறு ஒன்றையும் காணவில்லை.

"அது வெறும் நிழல்தானே! அதையேன் மோகினி என்று சொல்லுகிறீர்கள்!" என்று கிழவியைப் பார்த்துக் கேட்டேன்.

"ஆமாம், நீ சொல்லுவதும் உண்மைதான். மோகினி இப்பொழுது வெறும் நிழலாகத்தான் போய் விட்டாள். அதில் அதிசயமென்ன இருக்கிறது! கர்வம் பிடித்த மனிதனால் சித்தம் கலங்கி சிதைந்து போன மோகினி எத்தனைக் காலத்துக்குத்தான் இருப்பாள். இந்த ஆண்கள் வெறும் வஞ்சகர்கள். உங்களையெல்லாம் மோதி மிதித்து நசுக்க வேண்டும். யாராயிருந்தாலும் ஒரு நாளைக்குச் சாகத்தானே வேண்டும். ஒரு அழகான பெண்ணைக் கண்டால் கெஞ்சிக் கூத்தாடுவது. நாயைப் போல வாலைக் குழைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வருவது. கடைசியில் அவளை ஏமாற்றிவிட்டுத் தான்மட்டும் சுகமாக இருப்பது. அப்படிச் சுகப்படுபவன் எத்தனை நாளைக்கு வாழ்ந்து விடப் போகிறான்!" என்றாள்.

அவள் இப்படிச் சொன்னாளே தவிர அவள் குரலில் ஆத்திரமோ கோபமோ இல்லை. அவள் குரல் அடக்கமாகவே இருந்தது. ஆண்களின் அயோக்கியத்தனத்தைப் பற்றித் திறமையாக வர்ணித்துக் கூறினாள் என்று நான் அவளிடம் கோபப்பட முடியுமா! எந்த ஆண்மகன் அவளுக்கு எந்த மாதிரி தீங்கு இழைத்தானோ! இல்லை ஆசை காட்டி மோசம் செய்தானோ! இருந்தாலும் அதைக் கேட்டு விட்டு என்னால் வாயைப் பொத்திக்கொண்டு பேசாமல் இருக்க முடியவில்லை.

"பெண்கள்மட்டும் என்ன ஒழுங்கு! ஒரு பெண் தன் உடையை எவ்வளவு சுலபமாக மாற்றிக் கொள்கிறாளோ அவ்வளவு சுலபமாகவே நிமிஷத்துக்கு நிமிஷம் தன் மனத்தையும் மாற்றிக் கொள்கிறாள். அவர்கள் நல்லதொன்றையும் சொல்லுவதுமில்லை; செய்வதுமில்லை. நினைத்தபோதெல்லாம் அழுது அழுது ஆண்களை ஆட்டிப் படைத்து விடுகிறார்கள்! இந்த உலகமும், அதன் மக்களும் இந்தப் பெண்களின் சாகஸத்தினால் பட்ட பாட்டைச் சொல்லுவதற்கு எனக்கு வார்த்தைகளே கிடைக்க வில்லை" என்றேன்.

"நான் இப்பொழுது உன்னுடன் இது சம்பந்தமாக வாதாடத் தயாராக இல்லை. ஆனால் ஒரு பெண்ணைக் காதலித்துக் காத்திருக்கச் சொல்லிக் கடைசியில் பைத்தியமாக்கி விட்ட ஒரு ஆண் பிள்ளையின் அயோக்கியத்தனத்தைப் பற்றிச் சொல்ல வந்தேன். அதனால் ஏற்பட்ட கொடுமையைப் பார்! ஒரு நல்ல குடும்பத்துக்கு ஏற்பட்ட நாசத்தைப் பார்!" என்றாள்.

மிகவும் விசித்திரமான கதையை எதிர்பார்த்தவனாய், "அது எப்படி நடந்தது! எனக்குக் கொஞ்சம் சொல்லுங்களேன்! நானும் தெரிந்து கொள்கிறேன்" என்று கேட்டுக் கொண்டேன்.



அந்தக் கிழவி தான் அணிந்திருந்த ஈரப் புடவையை ஒரு தரம் ஒழுங்குபடுத்திக் கொண்டு அந்தக் கோயிலின் படியில் காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு சௌகர்யமாக உட்கார்ந்தாள். பிறகு கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.

இது நடந்து எத்தனையோ வருஷங்கள் ஆகி விட்டன. இந்தக் காட்டுக்கு முல்லைவனம் என்று சொல்லுகிறீர்களே, அது இந்தக் காட்டின் பெயர் இல்லை. அப்பொழுது இந்தக் காட்டில் பெரிய அரண்மனை போன்ற மூன்று கட்டிடங்கள் இருந்தன. அந்த மூன்று கட்டிடங்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களுடையதுதான். என்றாலும் மூன்று பேரும் ஒருவருக்குள் ஒருவர் சண்டை போட்டுக் கொண்டு ஒருவருடன் ஒருவர் பேசாமலே வாழ்ந்து வந்தார்கள்.

அண்ணன் தம்பி, மாமன் மைத்துனன் முதலிய உறவினர்களுக்குள் ஏன்தான் சண்டை போட்டுக் கொள்வார்களோ தெரியவில்லை. அதனால் யாருக்குப் பிரயோசனம்! மூன்றாவது மனிதன் இவர்களுடைய சண்டையை உபயோகப் படுத்திக் கொண்டு பிழைக்கப் போகிறான். சொந்தக்காரர்களுக்குள் சேர்ந்து வாழக் கற்றுக் கொண்டால் தான் ஊரோடும் உலகத்தோடும் சேர்ந்து வாழலாம். நம் மக்கள், நம் நாடு என்ற உணர்ச்சி ஏற்படும். அதனால் மனிதனை மனிதன் சமமாக எண்ணும் நிலை ஏற்படும். தன் பக்கத்தில் உள்ளவனின் தொழிலை ஆதரிக்கும் மனப் பக்குவம் ஏற்படும். இந்தப் பண்பு நம் மக்களிடம் ஏற்படும் நாள் எக்காலோ தெரியவில்லை. நல்ல காரியத்தைக்கூட சாதியாலும் சமயத்தாலும் எதிர்த்து நாசமாக்க முயலுகிறீர்களே!

எதையோ சொல்ல வந்தவன் என்னத்தையோ கதைக்கு வேண்டாத விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்து விட்டேன். இருந்தாலும் இப்படி நடக்காததால்தான் வசதியுள்ள அந்தப் பெரிய குடும்பம் கடைசியில் இருந்த இடம் தெரியாமலே போகும்படி கெட்டு விட்டது. அந்த மூன்று வீடுகளில் முதல் வீட்டில் ஒரு பெண் இருந்தாள். அவள் பேசும் பொற் சித்திரம் போல் இருப்பாள். இளமையின் அழகு, யௌவனத்தின் சோபை எல்லாம் ஒருங்கே திரண்டு பெண் உருவம் பெற்று விட்டதோ என்று எண்ணி வியக்கும் வண்ணம் இருப்பாள். அவள் ஆடை அலங்காரத்திலும், அங்க அசைவுகளிலும் ஒரு தனி லாகவத்தைக் காணலாம். அவள் நடக்கும்போது பார்த்தால் எங்கோ எப்போதோ நாம் கேட்ட இன்ப கீதத்துக்குத் தாளம் போடுவது போல அவள் அவயவங்கள் அசையும். அவள் வாய் திறந்து பேச ஆரம்பித்து விட்டாலோ, அடா, அடா! அதைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டியதுதான். அந்தச் சித்திரப் பாவையின் பெயர்தான் மோகினி. அவள் வாழ்ந்த வீட்டின் பெயர்தான் முல்லைவனம். அந்த மோகினியை இப்பொழுது எல்லாரும் மறந்து விட்டனர். அவளும் வெறும் நிழலாகி விட்டாள். ஆனால் அவள் வாழ்ந்த வீட்டின் பெயர் இந்தக் காட்டின் பெயராகிவிட்டது என்றாள்.

கிழவி சற்றுப் பேசுவதை நிறுத்தி விட்டு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

மோகினிக்கு அப்பொழுது வயது பதினாறு நிறைந்திருந்தது. அந்த வயதில்தான் இளம் பெண்களின் கள்ளமற்ற வெள்ளை உள்ளத்தில் காதல் தன் இன்ப கீதங்களைப் பாட ஆரம்பித்து விடுகிறது. அந்த இன்ப கீதத்தைக் கேட்டுக் கேட்டு அவள் படும் வேதனையை, அந்த இளம் உள்ளம் விம்மிப் பொருமுவதைக் காதல் உணர்வதில்லை. ஒரு முறை காதல் கீதத்தைக் கேட்ட இளம் பெண்ணால் மீண்டும் அந்தக் கீதத்தைக் கேட்காமலும் இருக்க முடிவதில்லை. அவள் அந்தக் காதல் கீதத்துக்கு மயங்கிப்பெருமூச்சு விட்டுக்கொண்டே இருக்கிறாள். அதிலேயே இன்பம் காணுகிறாள்.

மோகினி சதா முகம் பார்க்கும் நிலைக் கண்ணாடிக்கு எதிரில் போய் நிற்பாள். அதில் தோன்றும்



டாக்டர் பி. ஏ. எஸ். ராகவன் அவர்களின் புதல்வி சௌ. சரோஜாவுக்கும், ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரங்க தாத்தாச்சாரியார் குமாரர் சிரஞ்சீவி சி. எஸ். வரததேசிகனுக்கும் ஜூன் மாதம் இருபத்தெட்டாம் தேதி திருச்சியில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர். வாழ்க மணமக்கள்!

தன் அழகிய உருவத்தைப் பார்ப்பாள். இளநகை புரிவாள். கண்ணாடியில் தெரியும் தன் மோகன உருவத்தைப் பார்ப்பதாலோ இல்லை; வேறு எதையாவது நினைத்துக் கொள்வதாலோ அவள் பவழம் போன்ற அழகிய உதடுகள் சிரித்து மலரும்.

கண்ணாடிக்கு முன் நிற்காமல் வேறு எங்காவது தனியே உட்கார்ந்திருந்தால் அவள் மிகுந்த கவலையோடு உட்கார்ந்திருப்பாள். எதையோ சிந்தித்த வண்ணம் ஏங்கிக் கிடக்கும் உள்ளத்தை அவள் முகம் எடுத்துக் காட்டும். இதைப் பல தடவை கவனித்த நான் மிகவும் வருத்தப்பட்டேன். ஒரு தடவை அவளை நேரிலேயே கேட்டேன். அவள் தனக்கு யாரோ சொன்னதாக என்னிடம் சொன்னாள். 'ஆண் பிள்ளைகள் நன்றி கெட்டவர்கள். சுயநலம் கொண்டவர்கள்' என்றாள்.

ஒரு கன்னி கழியாத பெண், அதாவது கல்யாணமாகாத மங்கை ஆண் பிள்ளைகளைப் பற்றிப் பேசுவதைக் கேட்டவுடன் எனக்கு விஷயம் விளங்கி விட்டது. அவள் உள்ளத்தில் யாரோ ஆண்மகன் புகுந்து விட்டான் என்பதைத் தெரிந்து கொண்டேன். அவன் தன்னிடம் கொண்ட காதல் கடைசி வரையில் நிலைத்து இருக்க வேண்டுமே என்பதை எண்ணித்தான் அவள் வேதனைப்படுகிறாள் என்பதையும் என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. அதற்காகத்தான் அவள் அடிக்கடி தன்னை அலங்காரப் படுத்திக் கொண்டு கண்ணாடியில் பார்த்துக் கொள்கிறாள்.

கண்ணாடிக்கு முன் அவள் நிற்கும்பொழுது அவளுடைய கருநீல விழிகளும் அதன் கற்பனைக் கெட்டாத சுழற்சிகளும், மிருதுவான சிவந்த கன்னங்களும், அதன் பளபளப்பும் அவளை ஓர் அழகி என்பதை எடுத்துச் சொல்லிக் கொண்டே இருந்தன. அதனால் அவளுக்கு அவன் மீது ஒரு நம்பிக்கை உண்டாயிற்று தன்னைக் காதலித்தவன் கைவிடமாட்டான் என்று. அப்பொழுது அவள் உள்ளம் பூரிப்பால் விம்மும்; உற்சாகத்தால் நிமிரும். அவள் இதழ்க் கடையில் புன்முறுவல் துள்ளி விளையாடும்.

இந்த நிலையில் அடிக்கடி அவளைப் பார்த்து வந்தேன். அவளுடைய ஒவ்வொரு செயலையும் கூர்ந்து கவனித்தேன். எனக்கு அவளுடைய இளம் பிராயத்து நினைவுகள் வந்து விட்டன என்று சொல்லி நிறுத்தினாள் கிழவி. பிறகு இடிந்து போன கோயிலை அண்ணாந்து பார்த்தாள். எதிரிலிருந்த என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தாள். நான் அவளுடைய செய்கை ஒவ்வொன்றையும் கவனித்த வண்ணம் பேசாமல் இருந்தேன்.

இரவின் அமைதி இப்போது அதிகரித்து விட்டது. முல்லைவனத்து மரங்களிலிருந்து எழுந்த 'உஸ்...ஸ்...ஸ்...' என்ற லேசான சத்தம் மட்டும் எங்கும் நிறைந்திருந்தது. நடு நடுவே அடித்த காற்றால் காய்ந்த சருகுகளின் சலசலப்பும் மரக்கிளைகள் ஒன்றோடு ஒன்று மோதும் சத்தமும் கலந்து கேட்டன. முன்னைவிட நிலா நன்றாகக் காய்ந்தது. நிலவொளியில் காய்ந்த சருகுகளின் சலசலப்பு சின்னக் குழந்தைகள் ஓடி ஆடித் துள்ளி விளையாடுவது போலிருந்தது. இந்தச் சூழ்நிலையில் கிழவி மேலே கதையை ஆரம்பித்தாள்.

மோகினி சின்னக் குழந்தை. கவலை என்பது இன்னதென்றே தெரியாமல் இருந்த குழந்தை. அந்தக் குழந்தைப் பருவத்தை இப்பொழுது அவள் தாண்டி விட்டாள். இதற்கு முன் சதா வேடிக்கையும் விளையாட்டும் குறும்புத்தனமும் நிறைந்தவளாக இருந்தாள். எடுத்த காரியத்தை முடிக்கும் பிடிவாதமும் அதற்கான துணிவையும் பெற்றிருந்தாள். அரண்மனை போன்ற அவளுடைய பெரிய வீடு அவள் விஷமத்தனத்தால் நிர்த்தூளிப்படும். பகல் முழுவதும் சிட்டுக் குருவி போல அந்த வீட்டைச் சுற்றிச் சுற்றி வருவாள். இரவு வேளைகளில் களைத்துப் போன மான் குட்டி போல அயர்ந்து தூங்குவாள். தூங்கும்போது அந்தச் சிறுமியின் அழகிய முகத்தைப் பார்த்தால் பார்த்தவர்களின் கவலையெல்லாம் பறந்து விடும். அவ்வளவு அமைதியும் இனம் தெரியாத ஒரு இன்பமும் அந்த இளம் முகத்தில் தவழ்ந்து விளையாடும்.

மோகினி அவர்கள் பெற்றோர்களுக்கு ஒரே குழந்தை. மிக்க செல்வமாக வளர்ந்தாள். போதாக் குறைக்கு அவளுடைய பெரிய தாயார் ஒருத்தி வீட்டிலேயே இருந்தாள். அவள் மோகினியைத் தன் கண்ணின் கருமணியாய்ப் போற்றி வளர்த்தாள். தன் உயிரினும் மேலாக அவளை மதித்துப் பாராட்டினாள். இந்த உலகில் எனக்கு இருக்கும் ஒரே செல்வம் அவள்தான் என்று அவளை ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தாள். அந்தக் குடும்பத்தில் யாரும் அவளை எப்போதும் எந்தக் காரியத்துக்காகவும் கோபித்துக் கொண்டதே இல்லை. இருந்தாலும் தன்னுடைய விஷமத்துக்கோ, இல்லை விளையாட்டுக்கோ ஏதாவது ஒரு சிறு குந்தகம் ஏற்பட்டுவிட்டால் கூட மாலை மாலையாகக் கண்ணீர் விடுவாள். விம்மி விம்மி அழுவாள். அந்தக் குந்தகத்தைப் போட்டி போட்டுக்கொண்டு அவள் தந்தையும், தாயும், பெரிய தாயாரும் நிவர்த்தி செய்வார்கள். அழுகைக்கு மத்தியில் உடனே சிரிப்பு வெடிக்கும். கல கல வென்று கை கொட்டிச் சிரிப்பாள்.

இப்படித் துஷ்டத்தனம் செய்யும் குழந்தையை எப்படிக் கோபித்துக் கொள்ளாமல் வளர்க்க முடிந்தது என்று உனக்குத் தோன்றலாம். அங்குதான் மோகினியின் அருமையையும் பெருமையையும் நீ நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும்.

100% தூய்மையானது, சௌந்தர்ய தைலங்கள் சேர்ந்தது

# பாமாலிவ்

## அழகை எடுத்துக்காட்டுகிறது

### உங்கள் சருமத்தையும் சுத்தப்படுத்துகிறது



இதர உயர்ந்த சோப்களைவிட உங்கள் சருமத்துக்கு உகந்தது பாமாலிவ் அழகு முறை.

ஆம், இதர உயர்ந்த சோப்களின் 'சாதாரண கவனிப்பை' விடவும் உங்கள் சருமத்துக்கு பாமாலிவ் சோப் உகந்தது என்பது 1285 மாதர்களிடம் 36 நிபுணர்கள் நடத்திய சோதனையில் மறுக்க முடியாதபடி நிரூபணமாகியிருக்கிறது.

பாமாலிவ், அதன் அழகுமுறையைக் கையாளுங்கள். 100% தூய்மையான அதன் மெல்லிய, நறுமண நுரையை தினசரி மும்முறை 60 வினாடிகள் தேயுங்கள். 14 நாள், அல்லது அதற்குள்ளாகவே உங்கள் சருமம் மென்மையும் புதுமையும் பெறும்.

புதுமலரின் நறுமணம்
100% சுத்தமான நுரைக்
களஞ்சியம், அதிக காலம்
உபயோகிக்கலாம்




PSOG./13

**பாமாலிவ் — அழகுக்கு அழகு செய்யும் அருமை சோப்**

துள்ளித் திரியும் மான் குட்டியைப் பார்த்துக் கோபப்பட முடியுமா! அதிகாலையில் ஆரவாரம் செய்யும் பக்ஷிஜாலங்களைப் பார்த்துப் பதற முடியுமா! ஓயாது அலைக்கும் கடல் அலையைக் கண்டு கலங்கிவிட முடியுமா! அதுபோல அவளுடைய ஒவ்வொரு குறும்புத் தனத்திலும், விளையாட்டிலும், பிடிவாதத்திலும் ஒரு காம்பீர்யம் மிளிர்ந்தது. இந்தச் சூழ்நிலை கெட்டுப் போகாமல் இருக்க அவள் பெற்றோர்கள் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டார்கள்.

இந்த உற்சாகம் மேலும் வளர வேண்டும் என்பதற்காக அவளை அடுத்த வீட்டுப் பக்கங்கூட அனுப்பாமலே வைத்திருந்தார்கள். அடுத்த வீட்டில் இருப்பவர்கள் வேறு யாருமில்லை. மோகினியின் தாய் மாமாதான். இருந்தாலும் இரு வீட்டுக்குள்ளும் இருந்து வந்த பகைமை காரணமாக மோகினியை வீட்டுக்குள்ளேயே வைத்துப் பொத்திப் பொத்தி வளர்த்து வந்தார்கள். அவளும் அந்த வீட்டிற்குள் சுதந்திரமாகவும் சுறுசுறுப்பாகவும்தான் இருந்து வந்தாள். அவள் இளம் உள்ளத்துக்கு அடுத்த வீட்டுப் பகையை அதனால் ஏற்பட்டிருக்கும் விபரீதத்தை அறிந்து கொள்ளுவதற்கு வேண்டிய சந்தர்ப்பமே கிடைக்கவில்லை.

விளையாட்டோடு விளையாட்டாய் அவளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்தார்கள்; பாட்டுச் சொல்லிக் கொடுத்தார்கள். வீணை வாசிக்கக் கற்றுக் கொடுத்தார்கள். எந்தப் பள்ளிக் கூடத்திலும் சேர்ந்து படிக்காமலே மோகினி பத்தாண்டு பள்ளிக்குச் சென்று கற்றுக் கொள்ள வேண்டிய படிப்பைக் கற்றுக் கொண்டு விட்டாள். தன் தேனினும் இனிய குரலில் பாடிக் கொண்டு அவள் வீணை மீட்டுவதைக் கேட்டுக் கொண்டே இருக்கலாம். அந்த அற்புத கீதத்தைக் கேட்டுக் கொண்டே நூறு வருஷங்கள் கூடப் பட்டினி கிடக்கலாம். அவ்வளவு அருமையாகப் பாடுவாள்.

அந்தப் பாட்டின் இனிமையே அவளுடைய இணையற்ற இன்ப வாழ்க்கைக்குக் கேடாக வரும் என்று அப்பொழுது யாரும் எதிர் பார்க்கவில்லை.

அவளுடைய வேடிக்கையும் விளையாட்டும், பாட்டும் கூத்தும் ஒவ்வொரு நாளும் அதிகமாகிக் கொண்டே சென்றன. அந்தக் குறும்புத்தனங்கள் தலைவேதனை ஆகாமல் அதில் ஒரு அமைதியும், ஒழுங்கும் இன்பமும் கலந்து இருந்தன. இப்படியே அவள் வாழ்நாள் முழுவதும் இருப்பாள் என்று தான் அவள் பெற்றோர்கள் எல்லாரும் நினைத்தார்கள்.

ஆனால் கடும் புயல் அடித்து ஓய்ந்து விட்டது போல, இரு கரையும் புரண்டு ஓடும் புது வெள்ளம் திடீரென்று வற்றி விட்டது போல, மோகினியின் வேடிக்கை, விளையாட்டு, பேச்சு, சிரிப்பு, ஆட்டம், பாட்டம், அழுகை, அடம் எல்லாம் மாயமாக மறைந்து விட்டன. துள்ளித் திரிந்த மோகினி அடக்கமான பெண்ணாகி விட்டாள். பெண்மையின் அமைதி அவளிடம் நெருங்கி வந்து அணைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது.

இதைக் கவனித்த அவள் பெற்றோர்கள் சந்தோஷப்பட்டனர். அடக்கமாகவும் மௌனமாகவும் இருந்த மோகினியைக் கண்டு மகிழ்ந்தனர். மோகினி இப்பொழுது மங்கையாகி விட்டாள். அழகு நிறைந்த வாலிபப் பெண் ஆகிவிட்டாள். ஆனால் சிறுபிள்ளைத் தனமான விளையாட்டைவிட பருவம் பொல்லாதது, ஆபத்தானது என்பதை அவள் பெற்றோர்கள் அப்பொழுது உணரவில்லை. அவர்களால் உணர்ந்து கொள்ளவும் முடியவில்லை. அதுவே அவள் வாழ்வைக் குலைத்துவிடும் என்பதையும் ஒருவரும் எதிர் பார்க்கவில்லை.

மோகினி மங்கைப் பருவம் பெற்று விட்டாள். அவளுடைய அடக்கமே அவளுக்கு மேலும் அழகைக் கொடுத்தது. ஒரு பெண்ணுக்கு வேண்டிய எல்லா அழகும் அவளுடைய அடக்கத்தில் நிறைந்து காணப்பட்டன. ஆனால் 'முல்லை வனம்' என்ற பெயர் கொண்ட அவள் வீடு மட்டும் கலகலப்பின்றி இருந்தது. அவளுடைய உல்லாசமான பாட்டுக்களை, உற்சாகமான பேச்சுக்களை, இப்பொழுது கேட்க முடிவதில்லை. இதைக் கண்ட அவளுடைய பெரிய தாயார் மட்டும் சற்று வருத்தப்பட்டாள். மோகினியின் ஒவ்வொரு காரியத்தையும் கவனிக்க ஆரம்பித்தாள்.

அதிகாலையில் எழுந்துவிடும் மோகினி இப்பொழுது அதிக நேரம் படுக்கையில் படுத்துக் கிடந்தாள். சதா பெற்றோர்கள் மத்தியில் விளையாடி வந்த அவள் தனிமையை விரும்பினாள். சாப்பாட்டுக்கு வருந்தி அழைத்தால்தான் வர ஆரம்பித்தாள். அடிக்கடி நீண்ட பெருமூச்சு விட்டாள்.

அந்தப் பெரு மூச்சைக் கேட்டவுடனேயே மோகினியின் பெரிய தாயார் புரிந்து கொண்டாள். மோகினியைப் பிடித்திருக்கும் நோய் இன்னதென்று தெரிந்துகொண்டாள். இந்த நோய் இவளுக்கு எப்படி ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதைக் கண்டு பிடிக்க முயன்றாள்.



திருவல்லிக்கேணி லலிதா கலா மந்திரத்தில் சென்ற ஜூலை மாதம் 15ல் சரஸ்வதிகான நிலையத்தின் பிரின்ஸிபால் ஸ்ரீமதி கே. லலிதாவின் முதல் சிஷ்யையான குமாரி கே. ரங்கநாயகி ''வத்ஸலா கல்யாணம்'' கதா காலட்சேபம் செய்தார். குமாரி எல். உமாமகேசுவரியும் குமாரி கே. சகுந்தலாவும் பின்னணி சங்கீதம் பாடினர். குமாரி எல். பிரபாவதி பிடிலும் ஸ்ரீ என். பி. கோதண்டராமன் மிருதங்கமும் வாசித்தனர். இந்த வைபவத்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீமதி சரஸ்வதிபாய் கதா காலட்சேபம் செய்த கோஷ்டியாரைப் பெரிதும் பாராட்டினார்.

ஒருநாள் மாலை. மோகினியை வீட்டில் தேடித் தேடிப் பார்த்தாள். அவளைக் காணவில்லை. அவளைத் தேடிக்கொண்டு வீட்டுக்குப் பின்புறமுள்ள தோட்டத்துக்குச் சென்றாள். அங்கு தோட்டத்தில் எங்கிருந்தோ இரண்டு பேர் சேர்ந்து பாடும் குரல் கேட்டது. ஒன்று பெண்ணின் குரல்; மற்றொன்று ஆணின் குரல். குயிலினும் இனிய அந்தப் பெண்ணின் குரலிலிருந்து அது மோகினிதான் என்பதைத் தெரிந்து கொண்டாள்.

இப்பொழுது மோகினியின் கணீரென்ற குரல் மட்டும் நன்றாகக் கேட்டது.

"காதல் செய்வீர் உலகத்தீரே!
காதலினால் சாகாமல் இருத்தல்கூடும்,
கவலைபோம்; அதனாலே மரணம்பொய்யாம்
காதல் செய்வீர் உலகத்தீரே!"

என்று பாடிக் கொண்டிருந்தாள். சற்று நேரங் கழித்து அதே பாடலை இரண்டு பேர் சேர்ந்து பாடுவது கேட்டது. அந்தக் காதலர்களின் கீதம் வயது சென்ற அந்த மூதாட்டியைக் கூட ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. ஒரு கணம் தன்னுடைய இளமைக் காலத்துக்குச் சென்றாள். தான் அப்பொழுது அனுபவித்த இன்பங்களை எல்லாம் எண்ணிப் பார்த்தாள். அவள் முகத்தில் ஒரு புன்முறுவல் தவழ்ந்தது.

அவளையும் அறியாமல் அந்தப் பாட்டு வந்த திசையை நோக்கிச் சென்றாள். அவள் தலைக்கு மேலாகச் சின்னஞ் சிறு ஜோடிப்பறவைகள் வட்டமிட்டுச் சென்றன. இளம் தென்றல் அவளைத் தொட்டுத் தடவிக் கொடுத்து விட்டுச் சென்றது.

தூரத்தில் தெரிந்த தாமரைக் குளத்தின் படித்துறையில் இருவர் உட்கார்ந்திருந்தனர். மோகினி முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அருகில் யாரோ ஒரு வாலிபன் உட்கார்ந்திருந்தான். அவன் யார் என்று விளங்கவில்லை. இருந்தாலும் அவர்கள் பேசிக்கொள்வது மட்டும் நன்றாகக் காதில் விழுந்தது.

பெரிய தாயார் பூனை மாதிரி ஒரு மரத்து மறைவில் நின்றுகொண்டு அவர்கள் பேசுவதைக் கவனித்துக் கேட்டாள்.

"நான் இனிமேல் இங்கே உட்கார்ந்திருக்கக் கூடாது. வீட்டுக்குப் போவதற்கு நேரமாகி விட்டது" என்றான் அவன்.

மோகினி ஒருகணம் மௌனமாக இருந்தாள். பிறகு சொன்னாள். "இப்போ என்ன அவசரம்! நிலவு வரும் வரையில் உட்கார்ந்திருப்போமே."

"நான் இருப்பதைப் பற்றி எனக்கு ஒன்றும் பயமில்லை. உன்னைத் தேடிக்கொண்டுதான் யாராவது வந்து விடுவார்கள்."

"ரொம்ப சரி. அப்படியானால் போவோம்" என்று வருத்தத்தோடு சொன்னாள் மோகினி.

அந்த வாலிபன் எழுந்து விடை பெற்றுக் கொண்டான். மோகினியை அடிக்கடி திரும்பிப் பார்த்த வண்ணம் மெதுவாக நடந்து சென்றான்.

அப்பொழுது அந்தத் தோட்டம் அந்தி சூரியனின் அற்புத கிரணத்தின் அரவணைப்பை ஏற்றுக் கொண்டு வர்ணஜாலம் பெற்று விளங்கியது. ஒளியின் தெய்வமான சூரியன் தன் பொற் கிரணங்களை நீட்டி மூலை வனத்திலிருந்து விடை பெற்றுக் கொண்டிருந்தான். அந்த அஸ்தமன அழகை மோகினியும் அந்த வாலிபனும் கவனித்தனர். பெரிய தாயாரும் கவனித்தாள். மூவரும் தனித்தனியே நின்று கவனித்துக் கொண்டிருந்தனர்.

சுற்றியுள்ள சூழ்நிலை முழுவதும் அமைதிபெற்று விளங்கியது. அடக்க முடியாத குதூகலத்துடன் மோகினி துள்ளிக் குதித்துக் கொண்டு வீட்டை நோக்கி வர ஆரம்பித்தாள்.

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த பெரிய தாயார், உடனே ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய் அங்கிருந்து புறப்படத் தீர்மானித்தாள். வந்த சுவடு தெரியாமலே திரும்பிச் சென்றாள். மோகினியின் அறையில் போய் அவள் வருகைக்காகக் காத்திருந்தாள்.

மோகினி கையில் ஒரு தாமரை மலரை அதன் கொடியைப் பிடித்துச் சுற்றிக் கொண்டு "காதல் செய்வீர் உலகத்தீரே! காதலினால் சாகாமல் இருத்தல் கூடும். கவலை போம்; அதனாலே மரணம் பொய்யாம். காதல் செய்வீர் உலகத்தீரே!" என்று முணுமுணுத்துக் கொண்டே ஓடி வந்து தன் அறையில் புகுந்தாள். அங்கு இருந்த தன் பெரிய தாயாரைப் பார்த்தவுடன் ஒரு குதி குதித்து அவளிடம் ஓடினாள். அவள் மடியில் படுத்துப் புரண்டாள். அவள் தோளைக் கட்டிக் கொண்டு கொஞ்சினாள்; குலாவினாள்.

"அடாடா! இந்தத் தாமரை மலர் எவ்வளவு அழகாக இருக்கிறது. உனக்கு இது ஏது! நீ பாடிக்கொண்டே வந்தாயே அந்தப் பாட்டை யார் சொல்லிக் கொடுத்தார்கள்! ரொம்ப நன்றாக இருக்கிறதே!" என்று கேட்டாள்.

மோகினி ஏதோ எண்ணியவளாய்ச் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டாள்.

"மோகினி என்னிடம் எதையும் ஒளிக்காமல் சொல்லு. எனக்கு எல்லா விஷயங்களும் தெரியும்" என்றாள் பெரிய தாயார்.

மோகினியின் முகம் செந்தாமரை மலர் போல் செக்கச் செவேலென்று சிவந்தது.

அதே சமயத்தில் "காதல் செய்வீர் உலகத்தீரே! காதலினால் சாகாமல் இருத்தல் கூடும். கவலை போம்; அதனாலே மரணம் பொய்யாம், காதல் செய்வீர் உலகத்தீரே!" என்று யாரோ பாடும் பாட்டுக் காற்றிலே மிதந்து வந்தது. மோகினி சட்டென்று தலையை நிமிர்த்தாள். அந்தக் கீதத்தைக் காது கொடுத்துக் கேட்டாள். அப்பொழுது அவள் முகத்தில் ஏற்பட்ட உணர்ச்சிகளை விவரிக்க எனக்கு வார்த்தைகளே தெரியவில்லை. இந்தக் காட்சியைப் பார்த்த அவள் பெரிய தாயார் மௌனமாகப் புன்னகை புரிந்தாள். உடனே அவளும் அந்தப் பாட்டைக் கேட்க ஆரம்பித்து விட்டாள். வர வர அந்தப் பாட்டுச் சத்தம் பெரிதாகக் கேட்டது. எங்கோ மிக அருகிலிருந்து யாரோ பாடுவது போலிருந்தது. அது எங்கிருந்து வருகிறது என்பது தெரியாமல் ஒருதரம் நாலுபுறமும் பார்த்தார்கள். ஒரு திசைப் பக்கம் திரும்பிய மோகினி அந்தத் திசையிலேயே வைத்த கண் வாங்காமல் இருந்தாள். அந்தக் கீதம் அடுத்த வீட்டு மாடியிலிருந்து வந்ததென்று இப்பொழுது தெரிந்துவிட்டது. மோகினி அந்தப் பக்கம் இப்பொழுது நன்றாகத் திரும்பினாள். அவள் பெரிய தாயாரும் அந்தத் திசையைப் பார்த்தாள். அந்த வீட்டு மாடி ஜன்னலில் ஒரு அழகிய வாலிபனின் முகம் தெரிந்தது. அவன் கையிலும் ஒரு தாமரைப் பூ இருந்தது. அதன் காம்பைப் பிடித்து அவனும் வாகவமாகச் சுழற்றிக் கொண்டிருந்தான்.

மோகினியின் முகம் இப்பொழுது அல்லி மலர் போல வெளுத்து விட்டது. தன் பெரிய தாயாரை நிமிர்ந்து பார்த்தாள். அந்த அம்மையாரை நோக்கி எதையோ இரங்கிக் கேட்பது போலிருந்தது அந்தப் பார்வை. அவளுடைய உள்ள உணர்ச்சிகளை நன்றாகத் தெரிந்து கொள்வதற்காக மோகினியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள் பெரிய

தாயார். அவள் கண்களில் காதல் நடனமாடிக் கொண்டிருந்தது. அவள் அழகிய கருங் கூந்தல் காற்றில் ஆடிக் கொண்டிருந்தது. அவள் தலையை மெதுவாகத் தடவிக் கொடுத்தாள்.

இதுவரையில் கேட்டுக் கொண்டிருந்த அந்தக் காதல் கீதம் சட்டென்று நின்றுவிட்டது. அதைத் தொடர்ந்து 'ஐயையோ!' என்று யாரோ அலறும் சத்தம் கேட்டது. மோகினியும், அவள் பெரிய தாயாரும் சத்தம் வந்த திக்கை நோக்கித் திரும்பிப் பார்த்தனர். அடுத்த வீட்டு ஜன்னலில் தாமரைப் பூவைச் சுழற்றிக் கொண்டிருந்த வாலிபனை யாரோ கழுத்தைப் பிடித்து உள்ளே தள்ளினார்கள். திறந்திருந்த ஜன்னலின் கதவைப் 'படார்' என்று சாத்தி விட்டார்கள்.

இந்தச் சம்பவம் எதிர்பாராத விதமாய்த் திடீரென்று நடந்ததால் பெரிய தாயாரும் மோகினியும் சற்று நேரம் பிரமை பிடித்தவர்கள் போலச் செயலற்று உட்கார்ந் திருந்தனர். மோகினி அந்த ஜன்னலையே வெறிக்க உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த அறையில் அமைதி குடி கொண்டிருந்தது. அந்த அமைதியைக் குலைத்துக் கொண்டே பெரிய தாயார் பேச ஆரம்பித்தாள். "மோகினி!" என்று அன்போடு கூப்பிட்டாள்.

மோகினி பதில் பேசாமல் தன் பெரிய தாயாரைத் திரும்பிப் பார்த்தாள். அவள் அன்பு முகத்தைப் பார்த்ததும் அழுகையும் ஆத்திரமும் குமுறிக்கொண்டு வந்தன. அவளுடைய மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு சிறு குழந்தையைப் போல் விம்மி அழுதாள்.

கிழவி பெருமூச்சுவிட்டவாறே கதை சொல்லுவதை நிறுத்தினாள். மூங்கில்வனத்துக்குள் காற்று புகுந்து வருவதால் ஏற்பட்ட சத்தம் மட்டும் 'ஙய்' யென்று கேட்டது. பால் போன்ற நிலவொளியினால் இரவின் அந்தகாரம் குறைந்து வருவது போலக் காணப் பட்டது. கிழவியைப் பார்த்தேன். அவள் தலை இலேசாக ஆடியது. அவளுக்குத் தூக்கம் வந்து விட்டது போலத் தோன்றியது. ஒரு காரணத்தினால் அவளுக்காக நான் வருத்தப் பட்டேன். (தொடரும்)

# கைத்தொழிற் கல்லூரி

1881ம் ஆண்டு ஜூலை மாதம் ஒரு நாள் ஒரு ஆர்வம் மிக்க இளைஞர் ஒருவர் ஒரு புதிய பள்ளியை நிறுவ இரவும் பகலுமாகப் பாடுபட்டு வந்தார். அவர் உள்ளத்தில் ஏற்பட்ட எண்ண அலைகள் பற்பல. ஏதோ ஒரு பாழடைந்த இடத்தில் ஒரு பள்ளியை எப்படியோ நிறுவி விட்டார். அது ஒரு புது மாதிரியான பள்ளி, அதில் பகலில் பத்து மணி நேரம் கைத்தொழிலும் இரவில் இரண்டு மணி நேரம் படிப்பும் கற்றுக் கொடுக்கப்பட்டு வந்தது.

முதலில் அதில் சில மாணவர்களே சேர்ந்தனர். அதன் ஆசிரியர் அவர்களைத் தோட்ட வேலை, கட்டிட வேலை செய்யச் சொன்னபோது அவர்கள் மறுத்தனர். பெற்றோர்களுக்குத் தெரிவித்து அதை ஒழித்துக் கட்டிவிட முனைந்தனர். ஆனால் ஆசிரியரின் ஊக்கமும், விடாமுயற்சியும் இவை போன்ற எதிர்ப்புகளைத் தவிடுபொடி யாக்கி மாணவர்களை உழைக்கும்படிச் செய்தன,

ஆசிரியரே தோட்ட வேலை, கட்டிட வேலை செய்வதைக் கண்ட மாணவர்கள் மனம் மாறினர். அவ்வேலைகளில் தாங்களும் பங்கெடுத்துக் கொண்டனர். பாழடைந்த இடத்தில் ஆரம்பிக்கப் பட்ட அப்பள்ளி நாளடைவில் பெரிய கலாசாலை ஆயிற்று. அங்கு கட்டப்பட்ட கட்டிடங்கள், மரச் சாமான்கள் மற்றுமுள்ள பொருள்கள் யாவும் அக்கல்லூரியில் கல்வி பயிலும் மாணவர்களால் செய்யப்பட்டவைகளே!

இம்மாதிரியான நூதன கல்லூரியை ஏற்படுத்த அதன் ஆசிரியருக்கு எது வழிகாட்டியாக அமைந்தது! அவருடைய வாழ்க்கையின் ஏடுகளை சற்று முன் தள்ளிப் பார்ப்போமாயின் இதன் உண்மை நமக்கு விளங்கி விடுகின்றது.

அவர் ஒரு ஏழை. தாழ்ந்த குலத்தில் பிறந்தவர். படிப்பென்பதையே இன்னதென்று அறியாத குடியிற் பிறந்தவர். இவரிடம் ஊக்கம் இருந்தது. அறிவும் இருந்தது. எப்படியோ பள்ளிப் படிப்பைப் பெற்றுக் கொண்டார். அதோடு நிற்கவில்லை. கல்லூரியில் சேரவும் திட்டம் போட்டார். அவர் திட்டம் வெற்றி பெற்றது; எண்ணம் ஈடேறியது.

கல்லூரியில் சேருவதற்கு முன் அவருக்கு அங்கு ஒரு பரீட்சை வைக்கப்பட்டது. பரீட்சை என்ற உடனே கையில் ஒரு வினாத் தாளைக் கொடுத்து மண்டையை உடைத்துக் கொண்டு பதில் எழுதும்படி சொன்னதாக நினைத்துவிட வேண்டாம். அவர் கையில் கொடுக்கப்பட்டது வினாத்தாள் அன்று. ஒரு விளக்குமாறு! அக்கல்லூரி ஆசிரியர் இவருடைய கையில் ஒரு விளக்குமாற்றைக் கொடுத்து ஒரு அறையைச் சுத்தம் செய்யும் படிக் கூறினர். அந்த இளைஞர் உழைப்பின் பெருமையை உணர்ந்தவர். அவர் அந்தக் காரியத்தைச் சுத்தமாகவும் சுலபமாகவும் செய்து வெற்றிகரமாக முடித்ததில் என்ன வியப்பிருக்கிறது!

இதுவரை சொன்னது முழுவதும் கதை என்று எண்ணிவிட வேண்டாம். இவைகள் உண்மையாகவே அமெரிக்காவில் ஒரு மகானுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள். அவர்தான் வாஷிங்டன் என்ற நீக்ரோ இளைஞர். அவருடைய வாழ்க்கையின் ஒவ்வொரு பொன் ஏடும், புத்தகப் படிப்புடன் கைத்தொழிற் படிப்பும் சேர்ந்தால் மாணவர்களுக்கு நல்ல பயனை அளிக்கு மென்று பறைசாற்றுகின்றன. கைத் தொழில் கற்றுக் கொடுப்பின் தம் குலத்தவர் அடிமையாகவே இருக்க நேரிடும் என்று குறுகிய நோக்கோடு அவர் இருந்திருந்தால் இன்று அவர் குலம் முன்னேறியிருக்க முடியாது.

அவர் ஏற்படுத்திய கலாசாலை அழிந்துவிடவில்லை. வானளாவிய கட்டிடங்களுடன் சிறந்து விளங்கி வருகின்றது. அமெரிக்காவில் டஸ்கிகி என்னுமிடத்தில் இக் கல்லூரி உள்ளது. இன்றும் அக் கல்லூரியில் மாணவர்களுக்கு அதிக நேரம் கைத் தொழில் கற்பிக்கப்படுகின்றது. ஆண்டு தோறும் ஆயிரக் கணக்கான மாணவ மாணவிகள் புத்தகப் படிப்புடன் கைத்தொழிற் படிப்போடு வெளியே வருகின்றனர்.

அவர் நினைவு அழியாமல் நிற்க அவருடைய உருவச் சிலை ஒன்று அக் கல்லூரியில் நிறுவப்பட்டுள்ளது. அதன் அடியில் அவர் நீக்ரோ சமூகத்தின் அறியாமையைக் கைத்தொழிற் கல்வியால் அகற்றிய கதை வரையப்பட்டுள்ளது. — கி. வசுமதி

# கைவிட மாட்டான்!

வ. சா. நாகராஜன்

சற்றுத் தள்ளியிருந்த சாலையில் சென்ற ஒரு லாரி மட மட வென்று எழுப்பிய சத்தத்தைக் கேட்டுப் பழனியப்பன் கண் விழித்துக் கொண்டான். படுத்திருந்த கயிற்றுக் கட்டிலில் எழுந்து உட்கார்ந்து சோம்பல் முறித்தபடியே ஆகாயத்தைப் பார்த்தான். அந்தக் காலை வேளையில் பௌர்ணமிச் சந்திரன், நீல மயமான வானத்தில் ஒரு அசாதாரணமான அமைதியும் அழகும் குழக் கொலுவிருந்தான்.

"அம்மா!" என்று கூப்பிட்டான் பழனி, குடிசைப் பக்கம் திரும்பி. "ஏன் பழனி!" என்று கேட்டுக் கொண்டே குடிசைக்குள் நுழைவுப் நடையில் படுத்துக் கொண்டிருந்த அவன் தாய் எழுந்து வந்தாள். அவன் நெற்றிப் பொட்டில் கையை வைத்துப் பார்த்து விட்டு "இளைப்பிவிட்டாயா, பழனி!" என்று கேட்டாள் அவள்.

"ஆமாம், அம்மா!" என்று சொல்லிக் கொண்டே குடிசைக்குள் நுழைந்து காக்கிச் சட்டையையும் தலையில் கட்டிக் கொள்ள வேண்டிய பச்சைத்துணியையும் எடுத்துக் கொண்டான்.

"பழனி! இன்று ஒரு நாளைக்கு உடம்பைப் பார்த்துக் கொண்டு நாளைக்குப் போகக்கூடாதா? நேற்று இரவு பூராவும் உடம்பை வலிக்குது என்று சொல்லிக் கொண்டிருந்தாயே!" என்றாள்.

"எனக்கு இப்ப ஒன்றும் இல்லை அம்மா, இதோ பாருங்கள்!" என்று சொல்லிக்கொண்டே இரண்டு கைகளையும் தோளுக்கு மேலே ஒரு சொடுக்குச் சொடுக்கிக் காண்பித்துவிட்டுக் குடிசையை விட்டு வெளியேறி எழும்பூர் ஸ்டேஷனை நோக்கி நடந்தான் பழனி.

பழனி எழும்பூர் ஸ்டேஷனில் போர்ட்டர். பரம்பரை உத்தியோகம் இல்லை. வருஷக் கணக்குக் கூட ஆகிவிடவில்லை. இந்த உத்தியோகத்துக்கு அவன் வந்து நான்கே மாதங்கள்தான் ஆகியிருந்தன. அதற்கு முன்பு சிதம்பரத்துக்குப் பக்கத்தில் இருந்த கிராமம் ஒன்றில் வயல்களுக்கு அண்டை வெட்டிக் கொண்டிருந்தான் அவன்.

சிறு வயதிலேயே தகப்பன் காலமாகிவிட்டாலும் பழனி மிகவும் யோக்கியமான பிள்ளையாக வளர்ந்தான். ஊருக்கு அடங்கிய பிள்ளையாக, அவனுடைய தாய்க்கு ஒரே மகனாக, இருபது வயது ஆண்மகனாக வளர்ந்திருந்த பழனியப்பனை ஊரில் எல்லோருக்கும் பிடித்திருந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. பழனி தன் மாமனுடைய ஆதரவிலேயே வயல் வேலைகளைப் பார்த்துக் கொண்டு வந்தான். மாமனுக்கும் சொந்தத்தில் ஆஸ்தி ஒன்றும் இல்லை. பிறருடைய நிலங்களைப் பயிர் செய்துகொண்டுவந்த அவன், தன் தங்கை மகனின் உண்மையான உழைப்பைத் தன் வயல்களில் பயன்படுத்திக் கொண்டு எல்லோருக்கும் போலவே பழனிக்கும் ஊதியம் அளித்து வந்தான்.

மாமனுக்கு இரண்டு பெண்கள் உண்டு. பெரிய பெண்ணுக்குக் கல்யாணம் ஆகிப் புருஷன் வீட்டுக்குச் சென்று விட்டாள். அவள்தான் பழனியைக் குழந்தைப் பருவம் முழுவதும் சதா இடுப்பில் வைத்துக் கொண்டு வளர்த்தவள். புருஷன் வீட்டுக்குச் சென்ற பிறகும் அவளுக்குப் பழனியிடம் தன் உடன்பிறந்த தம்பி போன்ற வாஞ்சை உண்டு. மாமனின் அடுத்த பெண்ணான கண்ணம்மா பழனிக்காகவே வளர்ந்து வந்தாள்.

மாமனுக்கும் மாமன் மனைவிக்கும் பழனிக்குத் தங்கள் மகளைக் கொடுக்க விருப்பம்தான். அப்படியே அவர்கள் பெண் கொடுக்கத் தயாராக இல்லாவிட்டாலும் பழனிக்கு அந்த ஊரில் போட்டி போட்டுக் கொண்டு பெண் கொடுக்க எத்தனையோ பேர் தயாராக இருந்து வந்தார்கள்.

பழனிக்கும் கண்ணம்மாவுக்கும் இடையில் வளர்ந்திருந்த கணவன்—மனைவி உறவு அவர்கள் உள்ளத்திலும் ஊறிவிட்டது.

ஒருநாள் பழனியிடம் "நான் ஒரு சொப்பனம் கண்டேன். அது பலிக்குமா!" என சோகமாகக் கேட்டாள் கண்ணம்மா.

"என்ன சொப்பனம்!" என்றான் பழனி.

"எனக்குப் பயமாக இருக்குது. இன்று காலையிலேதான் அந்தமாதிரிச் சொப்பனம் கண்டேன். அப்பா உங்களுக்கு என்னைத் தரமாட்டேன் என்று சொல்லிவிட்டாங்க. உங்களுக்கும் அவருக்கும் சண்டை மூண்டு விட்டது. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை" என்றாள்.

பழனி சிரித்தான். "கண்ணம்மா! நாம் காணும் கனவெல்லாம் பலிப்பதாக இருந்தால் நாளைக்கு நாம் இருவரும் இந்த ராஜ்யத்தில் மந்திரிகளாகிவிட வேணும். நான் மந்திரியாகப் போவதாகச் சொப்பனம் கண்டேன்" என்றான்.

கண்ணம்மாவின் பயம் வீண் போகவில்லை. மாமன் காளிமுத்துவின் மனைவியின் தம்பி ஒருவன் சிறு வயதில் சிங்கப்பூருக்கு ஓடிப் போனவன்



திடீரென்று ஒருநாள் திரும்பி ஊருக்கு வந்தான். கையில் கொஞ்சம் பணத்துடனும் உடலில் வியாதியுடனும் வந்து சேர்ந்த அவன் பணத்தைத் தன் தங்கையிடம் கொடுத்து அவள் பராமரிப்பில் சில நாட்கள் இருந்து விட்டுப் பிறகு உயிரை விட்டான். இப்படியாகக் காளிமுத்து எதிர்பாராத விதமாகப் பணக்காரன் ஆனான்.

குடியிருந்த குடிசை ஓட்டு வீடாயிற்று. ஊரிலே கடனில் உழன்று கொண்டிருந்த ஒரு சின்ன முதலாளியின் நிலபுலன்கள் காளி முத்துவின் கைக்கு மாறின. வாரம் வாங்கி வயிறு வளர்த்து வந்த காளிமுத்து வெற்றிலைப் பெட்டி, குடை, கைத்தடி சகிதம் வயல் வெளிகளுக்குப் போக ஆரம்பித்தான். எல்லாம் ஒரு வருஷத்துக்குள்.

பணம் மனைவியின் பணம். அவனுடைய நாட்டம் தன் பக்கத்து உறவில் கொஞ்சம் ஆஸ்தியுடன் இருந்த ஒரு பையனின் மீது விழுந்தது. கண்ணம்மாவை அவனுக்கே கொடுக்க, காளிமுத்துவும் சம்மதித்தான். 'ஓட்டு வீட்டுக்காரன் பெண் ஓட்டு வீட்டுக்குத்தான் போக வேண்டும்' என்று சொல்லிக் கொண்டான்.

கொஞ்சம் கொஞ்சமாக விஷயம் பழனிக்குத் தெரிந்தது. முதலில் மாமனிடம் வேலை செய்வதை நிறுத்திக் கொண்டான். பிறகு ஒரு நாள் கண்ணம்மாவின் கல்யாணத்தைப் பற்றி மாமனிடம் நேரிலேயே கேட்டு விட்டான்.

"என் மகளைக் கல்யாணம் கட்டிக் கொள்ள உனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது! முன்னே சொன்னேன். ஆனால் நான் முன்னே இருந்த காளிமுத்து இல்லை. அது உனக்குத் தெரியுமில்லையா! கண்ணம்மாவைக் கட்டிக் கொள்ளலாம் என்ற ஆசையை இன்றோடு விட்டு விடு" என்று காளிமுத்து சொல்லி விட்டான்.

பழனியின் ரத்தம் கொதித்தது. நரம்புகள் துடித்தன. மனசை அடக்கிக்கொண்டு வீட்டுக்குப் போவதற்காகத் திரும்பினான். திரும்பிய போது பக்கத்து அறையில் கண்ணம்மா இருந்தது அவன் கண்களுக்குத் தென்பட்டது.

"கண்ணம்மா! உன் அப்பாவின் மனசு இப்படி மாறி விடும் என்று நான் நினைக்கவே இல்லை" என்றான் பழனி.

"என் மனசு மாத்திரம் என்ன! ஏன், கண்ணம்மா மனசு மாத்திரம் மாறாதோ! தம்பி பழனி! முறைப்பெண், அது இது என்று வீண் ரகளை பண்ணாதே! இத்தனை நாளாக யோக்கியமான பிள்ளையாக நடந்து கொண்டாய். இனி மேலும் அந்தப் பெயரைக் கெடுத்துக் கொள்ளாதே. ஆமாம்!" என்றான் காளிமுத்து.

பழனிக்கு இந்த உலகமே சுழல்வதுபோல் இருந்தது. கண்ணம்மாவின் மனமும் மாறி விட்டதா! பணம் வந்தால் எல்லாருமே மாறி விடுவார்களா! கண்ணம்மா கூடவா!

உண்மையில் கண்ணம்மாவின் மனம் மாறாமல் இருந்திருந்தால் உடனே தன் காலில் வந்து விழுந்து, "இல்லை அத்தான், என் மனம் மாறவில்லை" என்று கதறுவாள் என்று பழனி எதிர்பார்த்தான். தான் தன்னுடைய மானத்தையும் சுய கௌரவத்தையும் விட்டு விட்டு மாமனிடம் வந்து கேட்கவில்லையா! கண்ணம்மா மட்டும் அவள் இருந்த அறையை விட்டு நகரவில்லை. பழனியைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அடுத்த கணம் அந்த வீட்டை விட்டு வெளியில் வந்து விட்டான் பழனி.



அதற்குப் பிறகு அந்த ஊரில் இருக்கப் பழனிக்குப் பிடிக்கவில்லை. கண்ணம்மாவின் மனமாறுதல் அவனுடைய வாலிப உள்ளத்தைச் சதா சோர்வடையச் செய்தது. ஒரு நாள் தன் தாயை அழைத்துக் கொண்டு ரயில் ஏறிவிட்டான்.

வடக்கே போகப் போக, தென்னாற்காடு ஜில்லாவிலும் செங்கல்பட்டு ஜில்லாவிலும் பல வருஷங்களாக மழை யின்மையால் வருவோரை வாழவைக்கும் வளமுடையதாக இல்லை. அதனால் பழனி பிழைப்பை நாடிச் சென்னைக்கு வந்தான்.

எழும்பூரில் இறங்கியவுடனேயே அவன் தீர்மானித்து விட்டான், தான் என்ன வேலை செய்ய வேண்டும் என்று. ஸ்டேஷனில் பெட்டி படுக்கை தூக்கும் வேலைதான் அது. அவர்களிலே ஒருவரை எப்படியோ சிநேகம் பிடித்துக் கொண்டு லைஸென்ஸும், வில்லையும், காக்கிச் சட்டையும், பச்சைத் தலைப்பாகையுமாக எழும்பூர் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் போர்ட்டராக ஆனான். அவன் பங்கில் அதிர்ஷ்டம் இருந்தது. தினம் காலையிலும் மாலையிலும் இரண்டு மூன்று ரூபாய் கிடைத்தது.

பூந்தமல்லி நெடுஞ்சாலைக்குத் தெற்கே, ரயில்வே லயனுக்கு அருகில் ஒரு குடிசையையும் அமர்த்திக் கொண்டான். காலையிலும் இரவிலும்தான் ஸ்டேஷனில் வேலை. பகல் வேளைகளில் வேறு வேலை ஒன்றும் இல்லாமல் இருந்ததால் ஒரு மளிகைக் கடையில் சாமான் எடுத்துக் கொடுக்கும் சிற்றாளாக வேலை செய்து மாதம் பதினைந்து ரூபாய் சம்பளமும் இலவசமாக உப்பும், புளியும், பருப்பும், இதர சாமான்களும் பெற்றான்.

பழனிக்கே தன் வாழ்க்கையை உண்மை என்று நம்ப முடியவில்லை. மாதம் ஐம்பது ரூபாய் மீத்து வைக்கிறோம் என்பதை அவனால் நம்பவே முடியவில்லை. "கண்ணம்மா மாத்திரம் அருகில் இருக்



"இரவில் மூன்று குழந்தைகளும் சேர்ந்து அழும்போது, நீ எப்படிச்சகித்துக்கொள்கிறாய்?"

"அது என்ன பிரமாதம்? என் மூத்த பிள்ளை போடுகிற கூச்சலில் மற்ற இரண்டு குழந்தைகள் அழுவதும் காதில் விழுவதில்லை!"

தால்" என்ற ஆசை துளிர் விடும்போது, அன்று 'என் மனம் மாறவில்லை அத்தான்!' என்று சொல்லத் தைரியம் இல்லாத—மனம் இல்லாத கோழைப் பெண்ணைப் பற்றி நினைக்கவே கூடாது என்று தீர்மானிப்பான்.

*

'கூ, கூ' வென்ற சத்தம் கேட்டது. பழனி திரும்பிப் பார்த்தான். செங்கோட்டை பாசஞ்சர் வந்து விட்டது. ஒரே ஓட்டமாக ஓடி, பிளாட் பாரத்துக்குப் போய் ஓரிடத்தில் நின்று கொண்டான். அவன் நின்றிருந்த இடத்துக்கு எதிரில் நின்றது ஒரு பெண்கள் வண்டி. பழனிக்கு மன உற்சாகம் குறைந்தது. பெண்கள் வண்டியிலிருந்து அதிகமான மூட்டை முடிச்சுகளுடன் யார் இறங்கப் போகிறார்கள்! யாராவது "போர்ட்டர்" என்று அவன் காதில் ஆனந்தத்தை எழுப்பும் பெயரைச் சொல்லிக் கூப்பிட மாட்டார்களா!" என்று ஏங்குவான்.

"இந்தாப்பா......!" பழனி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"கண்ணம்மா......!"

"வந்துட்டிங்களா, அத்தான்!"

அவள் கூறியது பழனியின் காதில் விழவில்லை. கையில் சிறு பெட்டி ஒன்றுடன் நிற்கும் அவளைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். பிளாட்பாரத்தில் இருந்த கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து கொண்டிருந்தது.

"கண்ணம்மா, நீ எப்படி இங்கே வந்தே!" என்று கடைசியில் நிதானத்தை வரவழைத்துக் கொண்டு அவன் கேட்டான்.

"உங்களுக்குத் தெரியாதா!" என்றாள் கண்ணம்மாள் சிரித்துக் கொண்டே.

"ஐயையோ! இது என்ன கண்ணம்மா, இது! நீ எப்படி இங்கே வந்தாய்!"

"உங்களுக்கு நான் வருவேன் என்று நிஜமாகவே தெரியாதா!"

"ஊஹும்..." என்று தலையசைத்தான் பழனி.

கண்ணம்மாவின் கண்களில் திடீர் என்று பயங்கர உணர்ச்சி பரவியதைப் பழனி கவனித்தான். இதற்கிடையில் "கண்ணம்மா!" என்ற குரல் கேட்டது.

பழனி சுற்றும் முற்றும் பார்த்தான். சற்றுத் தூரம் தள்ளி, மாரிமுத்து கண்ணம்மாவை நோக்கி வந்து கொண்டிருந்தவன், கண்ணம்மாவின் பக்கத்தில் பழனி நிற்பதைப் பார்த்தவுடன் அப்படியே பேயறைந்தவன் மாதிரி அங்கேயே நின்று விட்டான்.

பழனிக்கு ஒரு கணத்தில் விஷயம் விளங்கி விட்டது. தன் தூரத்து உறவான மாரிமுத்து கண்ணம்மாவை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறான்! பழனி வெறுப்பும் ஆத்திரமும் ததும்பும் முகத்துடன் கண்ணம்மாவை நோக்கினான். அதற்குள் அருகில் வந்துவிட்ட மாரிமுத்துவைக் கண்ணம்மா குரோதமும் கோபமும் பொங்கும் முகத்துடன் பார்த்து, "மாரிமுத்து, இவர் எங்கே இருந்தார் என்பது உனக்குத் தெரியாது இல்லையா! என்னை ஏமாற்றித்தானே அழைத்துக் கொண்டு வந்தாய்!" என்று கேட்டாள்.

பழனி மாரிமுத்துவை நோக்கி இரண்டடி வைத்தான். மாரிமுத்து பயந்து நடுங்கிக் கொண்டே "அண்ணே...என்னை மன்னித்து விடு..." என்று கெஞ்சினான். உடனே பழனியின் முகத்தில் ததும்பிய ரௌத்திரத்தைப் பார்த்து அங்கிருந்து ஓட்டம் எடுத்தான்.

பழனியும் கண்ணம்மாவும் குடிசையை நோக்கி ரெயில்வே லயனுடன் நடந்து கொண்டிருந்தார்கள். "உங்களை நினைத்து நினைத்து நான் சதா ஏங்கிக்கொண்டு இருந்தேன். அப்பா 'இனிமேல் அந்தப் பயலை நினைத்தால், உன்னை இந்த வீட்டிலே இருக்க விடமாட்டேன்' என்று சொல்லி விட்டார். இதற்கு மத்தியில் அம்மாவின் சொந்தக்காரன் அந்த உளுந்துப் பேட்டை ஓட்டு வீட்டுக்காரன் என்னைப் பரிசம் கேட்க வந்தான். எனக்குப் படிக்கத் தெரியுமா என்று கேட்டான். அப்பா 'தெரியாது' என்று சொல்லவே, எழுதப் படிக்கத் தெரியாத பெண் ஓட்டு வீட்டுக்கு வர லாயக்கில்லை என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான். ஊர் முழுவதும், நான் உங்களை நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்ற விஷயம் தெரிந்து விட்டது. அப்போதுதான் இந்த மாரிமுத்து வந்தான். அப்பா வீட்டிலே இல்லாத சமயமாகப் பார்த்து வந்தவன் 'நான் பட்டணம் போனேன், அங்கே பழனியைப் பார்த்தேன்' என்றான். உடனே என்னை அழைத்துக் கொண்டு நீங்கள் வரச் சொன்னதாகவும் அப்பாவிடம் பிறகு சொல்லிக் கொள்வதாக நீங்கள் சொன்னதாகவும் சொன்னான்.

உங்கள் மீதிருந்த ஆசையால் நான் செய்யும் காரியத்தையும் தெரிந்து கொள்ளாமல் அவனை நம்பி வந்து விட்டேன் அத்தான்.

நான் உண்மையிலேயே உங்களை நம்பி வந்ததால் கடவுள் என்னைக் கை விடவில்லை. அவரே பார்த்து உங்களை ரயிலடிக்கு அனுப்பி வைத்திருக்கிறார்" என்றாள். அப்பொழுது அவள் உடல் பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்தது.

"தன்னை நம்பியவரைக் கடவுள் எப்போதும் கைவிட மாட்டார். நம்பினோர் கெடுவதில்லை" என்றான். கண்ணம்மாவின் நடுங்கும் உடலைப் பழனி தன்னுடன் அணைத்துக் கொண்டான்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10













# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான அழுக்கிலிருக்கும்
கிருமிகளிலிருந்து உங்களைப் பாதுகாக்கிறது




L. 231-50 TM

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*